


இந்தக் காமா அப்படி சக்கைப்போடு போடுகிறது? என்று மெள்ள தொட்டுத் தடவிப் பார்க்கிறாரோ ரமணி? கபில் தேவுக்குத் திருமணம் நிச்சயமாகியுள்ளது. சண்டிகரில் நிச்சயதார்த்தத்தின் போது ரமணி பாத்தியாவுக்குத் தமது வலக்கரத்தை நீட்டுகிறார் கபில்.

"கபில்தேவ் ஒரு இளம் சினிமா நட்சத்திரத்தை மணம் முடிக்கப் போகிறார்!" — இப்படி ஒரு புரளி.

இளம் சினிமா நடிகை ஒருத்தி சண்டிகரில் கபில்தேவ் வீட்டுக்கு விஜயம் செய்தது இந்தப் புரளியைக் கிளப்பி விட்டது! 'கபில்தேவின் ஆயிரக்கணக்கான விசிறிகள் — பெண்களும் கூடத்தான் டெலிபோனில் கபிலுக்கு அன்புத் தொல்லை கொடுத்துக் கொண்டிருப்பார்கள்! அனைவருக்கும் கபில்தேவ் முகம் சுளிக்காமல் பதிலளித்துக் கொண்டிருப்பார்! அவருக்குத் தம் விசிறிகளிடம் அத்தனை ஈடுபாடு!

எந்த அழகிக்கும் கபில் தேவுக்கும் இனி யாரும் முடிச்சுப் போட்டு வதந்தி..யக் கிளப்ப முடியாது. அவருக்கும் ரமணிபாத்தியாவுக்கும் சண்டிகரில் நிச்சயதார்த்தம் நடந்தேறி விட்டது! இனி டெலிபோனில் பெண் விசிறிகளின் பெருமூச்சு 'ஒலி' எழாது! டெலிபோனை எடுப்பது கபில்தேவின் இல்லத்தரசியாக இருக்கலாம் அல்லவா!

கபில்தேவ் முதன் முதல் டெஸ்ட் பிரவேசம் செய்தது 1978-ம் வருஷம் அக்டோபர் 16-ந் தேதி பாகிஸ்தானிலுள்ள பாஸைலாபாத்தில்தான்! அன்று முதல் பம்பாயில் நடைபெற்ற ஜூபிளி டெஸ்ட் வரை பாஸ்ட் பௌலர் கபில் கலந்து கொண்ட டெஸ்ட்களின் எண்ணிக்கை 26. இதற்குள் அவர் டெஸ்ட்களில் நூறு விக்கெட்டுகளைச் சரித்து விட்டார்!

பாகிஸ்தானில் கபில்தேவின் மூதாதையருக்குப் பூர்வீக இல்லம் உண்டு. பாகிஸ்தான் போயிருந்த போது அதனைப் பார்க்க ஆசைப்பட்டாராம் கபில்தேவ். அத்தேசத்தில் இருந்த போது ஒரு தங்கச் சங்கிலியை வாங்கிக் கபில்தேவ் அணிந்து கொண்டார்! அவரது நண்பர் ஒருவர் சிவனின் உருவமும் 'கே' என்ற எழுத்தும் பொறித்த ஒரு பதக்கத்தை அந்தத் தங்கச் சங்கிலியில் கோத்துத் தந்தார்! அதை ரொம்ப லக்கி செயின் என்று கருதுகிறார் கபில்தேவ்!

கபில்தேவின் பெருமையை உலகுக்கு அறிவிப்பதற்கு உதவியவர் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு முன்னாள் தலைவர் ஆர்.டி. மெஹ்ரா. பஞ்சாபி மரவியாபாரிகள் குடும்பத்தைச் சேர்ந்தவர் கபில்தேவ். எல்லோருமே வாட்டசாட்டமான ஆறு அடி உயரத்தினர்! கபில்தேவ் அந்த உடல்வாகைப் பெற்றிருக்கிறார்! ஹரியானாவை உலகப் பிரசித்தி பெறச் செய்த கபில்தேவுக்கு அம்மாநில முதல் மந்திரி பத்தாயிரம் ரூபாய் பண முடிப்பு வழங்கிக் கௌரவித்தார். கபில்தேவிக்குச் சிகரெட் பிடிக்கும் பழக்கமோ, மதுப் பழக்கமோ கிடையாது. ஆக, அதிர்ஷ்டசாலி தானே ரமணிபாத்தியா! —குண்டுமணி

ஆதாரம்: ஸ்போர்ட்ஸ் வர்ல்ட் படம்: புல்விராஜு

# Kalki Shopping Page



அஷ்ட
ஐஸ்வர்யங்களும்
அடைய...

பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை!
வளமான வாழ்வுக்கு செல்வமே
உறுதுணையாகும்!
செல்வத்தின் நாயகியான
ஸ்ரீ மகாலட்சுமியின் அருள்பெற்று
சகல சௌபாக்கியமும் பெற...
ஸ்ரீ லக்ஷ்மி ஆகர்ஷண சக்கரம் (ரூ. 105 -)
தனப்ராப்தி டாலர் (ரூ. 35 -)
(பூஜையில் வைத்தது)
தபாலில் பெற 25% முன்பணமனுப்பி ;
வி.பி.பி.யில் பெறலாம். விரிவான 'கேட்லாக்'
பெற 25 பை தபால் தலையுடன் எழுதவும்.

நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்,
சென்னை-600 086. (போன் : 812013)



கைத் திறனும்
கலை வண்ணமும்
கலந்திழைந்தது!



கோ-ஆப்டெக்ஸ்

அருகில் உள்ள
விற்பனை நிலையங்களுக்கு
வருகை தாரீர்!

"வானவில்"
271, அண்ணா சாலை,
சென்னை-18.



BUY AT
SUKI
ELECTRONICS



Solidaire
SOLID STATE TV

Available on cash or easy instalment
With VIP Service

16, Veeraraghavan Street,
Nanganallur, Madras-600 061.
Phone: 433019.

மல்லிகைபோல் மென்மையாகத்
துல்லியமாய் மாவரைக்க....

"கணேஷ் & சௌபாக்யா"
மாவரை இயந்திரங்கள்



- உத்திரவாத உழைப்பு
- கவர்ச்சிகர அமைப்பு

தயாரிப்பாளர்:
ஸ்ரீ கணேஷ் இண்டஸ்டிரீஸ்
119, சத்தி ரோடு, ஈரோடு-1.
(போன் : 73513)

# CHOICEST PICK-les

Avakkai Mango
Hotslised Mango
Mango Thokku
Vadu Mango, Lime
Citron, Gongura
Green Corriander
Mixed Vegetable
Amla, Green Chilli, Garlic

**Ambi's**




Mfd. by:
Ambis Pickles and
Condiments of India

Exported by:
Western
Exports,

19, Neelakanta Metha Street
Madras-600 017 Phone 447355






*Our Stockists*:

1. M/s D. Srinivasa Iyengar, Maligai, West Car Street, Chidambaram & Cuddalore
2. M/s K. S. Muthuswamy Iyer Son R. V. Venkatarama Iyer, Maligai, Railady, Mayuram
3. M/s R. Ganapathi Pillai, Maligai, Railady, Mayuram
4. Thanjavur Cooperative Wholesale Stores Ltd., Thanjavur
5. Mayuram Cooperative Wholesale Stores Ltd., Mayuram
6. M/s A. V. M. Muthukrishnan & Bros, Pudupalayam, Cuddalore
7. M/s P. Ramalingam, 26, Bhandarkar Road, Matunga, Bombay-19
8. M/s P. V. R. K. & Co., 321, Avenue Road, Bangalore-2
9. M/s Geetha Stores, 115, Jeweller Street, Bangalore-1

★

எங்கள் புதிய D L C பிராண்ட்
அக்மார்க் நெய் 16 kg & 4 kg
கிடைக்குமிடம்

M/s Bharathi & Co
27, Mundy Street, Vellore-4

★

**Dhanalakshmi & Co**
**21-B, M. G. Pudur 1st Street,**
**Tirupur-638604**



எழில்மிகு வண்ணங்களில்
அழகுப் பொருளாக ஆக்கப்பட்டு
ஆடிவரும் தென்றலையும்
தவழ்ந்துவரும் பூங்காற்றையும்
உங்களுக்கு அள்ளித்தரும்
ஒரே ஃபேன் வெஸ்டெர்லி
நான்குவித வண்ணங்களில் கிடைக்கிறது



**வெஸ்டர்லி**

ஃபேன்களில் சிறந்தது
தனித்தன்மை வாய்ந்த சோக்
ரெகுலேட்டர் உங்களுக்கு
30% வரை மின்சாரச்செலவை
மிச்சப்படுத்துகிறது.

இன்றே
வெஸ்டெர்லி ஃபேன்களை வாங்கிடுவீர்!


தேர்தல்
வெற்றி




அஸ்ஸாம் கிளர்ச்சியாளர்களின்
பெரும்பாலான கோரிக்கைகளை
ஏற்றுக் கொண்டு விட்டோம்!
ஜெயில் சிங்!
கிளர்ச்சியாளர்கள்


கவலைப்படாதே! எப்படியும்
சிக்கல் எல்லாம்
சரி பண்ணிடுவோம்!
ஆர்-வி
வருமான வரி
விதிமுறைகள்



1980 ஜூன் 1
ரௌத்திரி வைகாசி 19
மலர்: 38 இதழ்: 44



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வாக்காளரின் வேண்டுகோள்

இதோ தேர்தல் வந்து விட்டது; இன்னும் இரண்டு மூன்று தினங்களில் நடந்து முடிந்து விடவும் போகிறது. புதிய ஆட்சி மலரப் போகிறது. அது,

புரட்சித் தலைவரின் தலைமையில் அமைகிற ஏக கட்சி ஆட்சியாக இருக்கலாம். அல்லது,

டாக்டர் கலைஞர் தலைமையில் உருவாகிற கூட்டணி ஆட்சியாகத் திகழலாம்.

எவ்வாறாயினும் ஒன்று ஆட்சி பீடத்தில் அமர மற்றொன்று எதிர்க்கட்சியாக விளங்கும். இரண்டுமே தமிழகத்தில் ஜனநாயகம் தழைக்கத் தேவைதாம். இவற்றிடையே பகைமைக்கு இடமில்லை, பாசத்துக்கே இடமுண்டு. மறவாதீர்கள்.

அரசு கட்டில் ஏறுபவர்கள் லஞ்ச ஊழல் எட்டிப்பாராத தூய ஆட்சியை அளிக்கட்டும். மக்கள் நலனுக்காக இங்கு இருக்கிறோம் சுயநலனுக் கல்ல என்பதை உணரட்டும்.

எதிர்க் கட்சியிலிருப்போர் நமக்கு எதிர்ப்பதுதான் பணி; அடுத்த தேர்தலுக்கு முன்பே ஆட்சியைக் கவிழ்ப்பது அல்ல என்பதை நினைவிலிருத்தட்டும்.

தேர்தலை வியாபாரமாகக் கருதி அதில் போட்ட முதலைப் பதவியில் இருக்கும் போது திரும்ப எடுக்கும் போக்கு இருதரப்பிலும் மறையட்டும்.

விரோதிகள் யார், நண்பர்கள் யார் என்பதை இரு தரப்பிலும் புரிந்து கொள்ளுங்கள். கட்சி மாறிகளை எட்டத்தில் வையுங்கள். அதன் மூலம், 'கட்சி மாறினால் ஆதாயம் உண்டு' என்ற கருத்துக்குச் சாவு மணி அடியுங்கள்.

வெற்றுக் கோஷங்களை விடுங்கள். அவற்றை மாநிலத்தின் வெற்றிக் கோஷங்களாக மாற்றுங்கள்.

தமிழக மக்கள் — குறிப்பாக கோடிக்கணக்கான தாய்மார்கள் — பொன்னே போல் போற்றி, கண்ணே போல் காத்துப் பயனடைந்துள்ள மதுவிலக்குக் கொள்கையைக் கை விடவோ தளர்த்தவோ செய்யாதீர்கள். மது விலக்கை ரத்து செய்தால் தான் தமிழகம் முன்னேற முடியும் என்ற மாயைக்கு அடிமையாகாதீர்கள். கண்ணை விற்று சித்திரம் வாங்குவதா?

எதேச்சாதிகாரப் போக்கு வேண்டாம். சகாக்களை, எதிர்க்கட்சிக் காரர்களை, மாநிலத்திலும் அதற்கு வெளியேயும் உள்ள நல்ல அறிஞர்களைக் கலந்தாலோசியுங்கள்.

அதிகாரிகளுக்குப் பொறுப்புக்களை நிர்ணயித்து, பிறகு அவர்கள் வேலையில் குறுக்கிடாது இயங்க விடுங்கள். பொறுப்புக்களைக் குறித்த காலத்துக்குள் நிறைவேற்றுகிறார்களா என்று கவனித்து, தட்டிக் கேட்பதுடன் நில்லுங்கள்.

உற்பத்திக்கு உதவாத செலவினம் எதையும் செய்யாதீர்கள். இனாம்களை வழங்குவதாக ஆசை காட்டி மக்களைக் கௌரவப் பிச்சைக்காரர்களாக்காதீர்கள், உங்கள் பணி அது வல்ல.

மாறாக, அரசுத்துறையிலும் தனியார் துறையிலும் ஏராளமான சிறிய பெரிய தொழிலகங்கள் கிராமப்புறங்களை யொட்டியுள்ள சிறிய ஊர்களில் தோன்றச் செய்து வேலை வாய்ப்புக்களைப் பெருக்குங்கள். இதைக் கவனித்தால்

மற்றப் பிரச்னைகள் தன்னால் தீர்ந்து போகும். இதற்குத் தேவையான சகல காரியங்களையும் திட்டமிட்டுச் செய்யுங்கள்.

பள்ளிப் பருவத்திலேயே தொழில் கல்வியும் பெற வாய்ப்பளிக்கும் விதமாகக் கல்வித் திட்டத்தை மாற்றுங்கள். 'பள்ளிப் படிப்பு முடியும் போது, ஒரு தொழிலகத்தில் பணியாற்றக் கூடியவனாகவோ, விவசாய நுணுக்கம் அறிந்தவனாகவோ, அல்லது தானே சிறுதொழில் செய்யத் தகுதியுள்ளவனாகவோ மாணவன் விளங்கட்டும். குமாஸ்தா மனப்பான்மையை வளர்க்கிற கல்லூரிகளில் சேரப் போட்டி குறையட்டும்.

மத்தியில் அதிகாரங்கள் குவிவதைத் தடுத்து மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் பெறப் போராடுங்கள். அதே போதில் உங்களிடம் அதிக அதிகாரங்களைக் குவித்துக் கொள்ளாது மாவட்டங்களுக்கும் கிராமப் பஞ்சாயத்துக் களுக்கும் அதிகாரங்களை வழங்குங்கள்: நகரசபை, பஞ்சாயத்துத் தேர்தல்களைக் காலா காலத்தில் நடத்துங்கள்.

ஹிந்தியின் மேலாதிக்கத்தை எதிர்த்துத் தமிழுக்கு உரிய அந்தஸ்தைக் கொடுங்கள். ஆங்கிலத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். பள்ளிகளில் அதன் தரத்தை உயர்த்துங்கள். ஹிந்தி மீது வெறுப்பை வளர்க்காதீர்கள். அதனைப் பயில விரும்புவோருக்கு வாய்ப்பு அளியுங்கள்.

மேற் கூறிய வற்றில் உடனடியாகச் செய்யக் கூடியவையும் உண்டு; படிப் படியாக நிறைவேற்ற வேண்டியவையும் உண்டு. இவற்றில் நீங்கள் முனைந்து இருப்பதாக எங்களுக்கு நம்பிக்கை பிறந்தால் நாங்கள் பழசையெல்லாம் மறந்து விடத் தயாராயுள்ளோம்.

ஏதேதோ எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம், எங்களுக்கு ஏமாற்ற மளிக்காதீர்கள்!

ஒரு புதிய அத்தியாயம் தொடங்கட்டும்.

## நட்சத்திர வடிவம் பரிசுத்திட்டம்-1 போட்டி முடிவு



பதினொரு துண்டங்கள் கிடைக்கப் பெற்று ரவீக் ராதிகாவின் முழு உருவத்தையும் கண்டு சரியானபடி ஒட்டி அனுப்பியவர்கள் ஐந்து பேர். 1. எஸ். உமா, 60, மேற்கு புலிவார்டு சாலை, திருச்சி-8; 2. கே. ஆர். சகவரி, கே. பி. VIII – 123, புது தெரு, கொடுவாயூர், பாலக்காடு மா.வ.; 3. எஸ். சித்ரா, 6, மேற்கு வீதி, சிக்கராயர் காலனி, மதுரை-2; 4. எம். ஆர். கங்காபாய், மே - பா. டாக்டர் ஆர். பார்த்திபன், உதவி சர்ஜன், அரசினர் மருத்துவமனை, மேட்டூர் அணை; 5. ஆர். மோகன்குமார், கோன்கிரேசி போஸ்ட், சிறுகுப்பா வட்டம், பெல்லாரி மாவட்டம்.

இவர்களுக்குத் தலா ரூ. 25 பரிசும் ரவிக் ராதிகாவின் கையெழுத்தோடு கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப்படும்.

இந்த முதல் போட்டியில் மிஞ்சிய ரூ.125ம் ஜாக்பாட்டில் சேருகிறது! 10 போட்டிகளுக்குப் பிறகு பதினோராவது இறுதிப் போட்டியில் இவ்வாறு சேருகிற தொகைகள் ஒட்டு மொத்தமான ஜாக்பாட் பரிசுத் தொகையாக விளங்கும். அது, அந்த 11-வது போட்டியில் வெற்றி பெறும் வாசகர்களுக்குச் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படும்!

ஆசிரியர், கல்கி

புகைப்படம்: ஏ. சுந்தரம்



"தமிழகத்தில் தேர்தல் பிரசாரம் வன்முறை தலைகாட்டாமல் நடந்தது" என்று நல்ல பெயர் வந்துவிடப் போகிறதே என்ற கவலையில் சிவாஜி மீது இரும்பு 'நட்' எறிந்து அவர் தலையில்காயம் ஏற்படுத்தி விட்டார் திருவாளர் "கயவன்". அடிபட்டதும் வேதனையில் சட்டென்று குனிந்த சிவாஜியின் தலை சீக்கிரமே நிமிரும். ஆனால் தமிழகத்தின் கௌரவத்துக்கு ஏற்பட்ட தலைகுனிவு நிமிர நீண்ட காலம் ஆகும். கணேசனைத் தாக்கிய 'கல்'லைவிட அதைத் தொடர்ந்து நம் நெஞ்சைத் தாக்கிய சொல் ஒன்று உண்டு. "என்னைக் கொலை செய்ய அ.தி.மு.க.வினர் முயன்றதற்கு எம்.ஜி. ஆரே காரணம்" என்றும் "நான் தூண்டி விட்டால் வன்முறை விசுவரூபமெடுக்கும்" என்றும் சிவாஜி பேசியிருக்க வேண்டியதில்லை. சோதனைக் கிடையிலும் கண்ணியம் காக்கத் தவறி விட்டார் கணேசன்.

எம். ஜி. ஆரின் ஆட்சியை "சினிமா காட்சி" என்று கேலி செய்யும் சிவாஜி, தாமும் தேர்தல் செட்டில் சினிமா வசனம் தான் பேசி விட்டார்!

●

பகுகுணாவுக்குக் காலங்கடந்த ஞானோதயம் ஏற்பட்டிருக்கிறது. இந்திராவினால் இப்படியெல்லாம் தான் நடத்தப்படுவோம் என்பதை அவர் இந்திரா காங்கிரஸில் சேர்வதற்கு முன்பாகவே உணராததுதான் ஆச்சரியம். இந்திராவிடம் எதேச்சாதிகாரத்தைத் தவிர வேறு எதை எதிர்பார்த்தார் பகுகுணா? சந்தேகமென்ன? தமக்குப் பதவிகளையும் அதிகாரங்களையும் தான்! அவை கிடைத்திருந்தால் இன்று அவர் அடைந்த ஞானோதயமே வேறு விதமாய் இருந்திருக்கும். "இந்திரா தான் இந்தியா" என்பதுடன் "சஞ்சய் தான் சர்வமும்" என்று கூடக்கூறியிருப்பார்!

பகுகுணாவின் ராஜினாமாவில் மெச்சத் தகுந்த விஷயம் கட்சியிலிருந்து விலகியதுடன் அக்கட்சி சார்பில் தாம் நின்று வென்ற நாடாளுமன்ற உறுப்பினர் பதவியையும் துறந்ததுதான். அந்த அளவுக்கு அவர் பாராட்டுக்குரியவர்.



●

ஜனநாயகத்தில் மக்களிடமிருந்து எதையுமே மறைக்கத் தலைவர்களுக்கு உரிமை கிடையாது. ரொம்ப அத்தியாவசியமான தேசப் பாதுகாப்பு சம்பந்தமான ரகசியங்களைத் தவிர மற்ற எதிலும் ஒளிவு மறைவு கூடாது.

மோஷே தயான் தமது தில்லி விஜயத்தை ரகசியமாக வைத்துக் கொள்ளுமாறு கேட்டிருந்தாலும் "எங்கள் ஜனநாயகத்தில் அது சாத்தியமில்லை. இஷ்டமிருந்தால் பகிரங்கமாக வந்து பேசுங்கள். இல்லையேல் வேண்டாம்" என்றே அன்று ஆட்சியிலிருந்த ஜனதா தலைவர்கள் கூறியிருக்க வேண்டும். அதுவும் மோஷே தயானின் வருகையால் நமது அரசின் அயல் நாட்டுக் கொள்கையில் எந்தவித மாற்றமும் இல்லை எனில் ரகசியச் சந்திப்புத்தான் எதற்கு?

ரகசியச் சந்திப்பே தவறு எனில் அந்தச் சந்திப்பை இந்திரா அம்பலப்படுத்திய பிறகு





அதனை மறுத்து மொரார்ஜியும் வாஜ்பாயும் அறிக்கை விட்டது இமாலயத் தவறு! இனி மறைக்க முடியாது என்ற நிலையில் இப்போது ஏதோ சப்பைக் கட்டுக் கட்டுகிறார்கள். அசடு வழிகிறது!

வழக்கமாகத் தவறு செய்கிறவர்கள் பற்றிக் கூட நாம் அதிகம் கவலைப்படுவதில்லை. யோக்கியமானவர்கள் என்று நம்பிக் கொண்டிருப்பவர் தவறிழைத்தால் மனம் ரொம்பவும் வருந்துகிறது. வாஜ்பாயின் புளுகு அத்தகைய வேதனைகளில் ஒன்று.

வாஜ்பாயின் கஜப் புளுகைத் தோற்கடிக்கும்படி சஞ்சய் அண்டப்புளுகு ஒன்றை உதிர்த்திருக்கிறார்! மோஷே தயான் இங்கு ரகசியமாக வந்து போனதால் தான் இங்கு பெட்ரோலியம் தட்டுப்பாடு ஏற்பட்டு விட்டதாம்! — தேர்தல் பிரசாரம் செய்கிறார்!

மோஷே தயான் ஒழுதுபட்ட தமது ஒரு கண்ணை சின்னக் கறுப்புத் துணியால் மறைக்கலாம். அந்தத் துணி விஸ்லையால் கஜப்புளுகையும் அண்டப் புளுகையுமா திரை போட்டு மறைத்துவிட முடியும்?

●

வேசா பாவின் மரணம் தற்கொலைதான் என்று ஒருவழியாகத் தீர்மானம் ஆகிவிட்டது. உடலைப் பரிசோதித்த டாக்டர்களும் கையெழுத்தைச் சோதித்த நிபுணர்களும் உறுதிப்படுத்தி விட்டார்கள்.

# செய்திகள் வாசிப்பது, செம்பியன்

ஓம் ஸ்ரீ மாத்ரே நம :

**ஆஸ்திகப் பெருமக்களுக்கு ஓர் அரிய செய்தி!**



ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் ஆசியும், மற்றும் ஸ்ரீ சிருங்கேரி ஆச்சார்யாள் இன்னும் பல மகான்களின் ஆசிகளும் அருளப்பெற்ற

**நவசக்தி நிலையத்தாரால்**

உருவாக்கப்படும்

**பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள் :**

1. ஸ்ரீ மகாமேரு (பஞ்சலோகம்) 2¼" × 2¼" ரூ. 455/–
2. ஸ்ரீ மகாமேரு (பஞ்சலோகம்) 1½" × 1½" ரூ. 215/–
3. ஸ்ரீ சக்கரம் (தாமிரம்) 3" × 3" ரூ. 105/–
4. ஸ்ரீ சக்கரம் (பஞ்சலோகம்) 2" × 2" ரூ. 105/–
5. ஸ்ரீ மகாலக்ஷ்மி சக்கரம் ரூ. 105/–
6. தனாகர்ஷண சக்கரம் ரூ. 105/–
7. அஷ்டாதச மகாலக்ஷ்மி துர்க்கை சக்கரம் ரூ. 105/–
8. திருஷ்டி நிவர்த்தி யந்திரம் ரூ. 42/–
9. திருஷ்டி நிவர்த்தி டாலர் ரூ. 35/–
10. ஒரிஜினல் ருத்திராக்ஷ மாலை (வெள்ளியில் கட்டியது) (54) ரூ. 225/–
11. **தெய்வீக டாலர்கள்:** அஷ்டலக்ஷ்மி பிம்பம் (6 செ. மீ.) ரூ. 105/– (ஸ்டாண்டு விலை ரூ. 7/-
12. ஸ்ரீ பாலாஜி தாயாருடன் கூடிய டாலர் (4 செ. மீ.) செட் ரூ. 90/–
13. ஸ்ரீ கஜலெக்ஷ்மி / கணபதி செட் (4 செ. மீ.) ரூ. 80/–
14. ஸ்ரீ முருகன், குருவாயூரப்பன், சீதாராம லெக்ஷ்மண ஆஞ்சனேயர் செட் ரூ. 45/–

இதுபோல் தேவைக்கேற்ற பலன் தரும் எண்ணற்ற சக்கரங்கள் மற்றும் ஹோமம், யாகம் இவைகளில் பூஜையில் வைத்து கொடுப்பதற்கேற்ற தெய்வீக டாலர்கள், காசுகள், — ஆர்டரின் பேரில்.

25 பைசா தபால் தலையுடன் இலவச விலைப் பட்டியலுக்கு எழுதவும்.

**விஸ்வகர்மகுரு ஸ்வாமி**

**ஸ்ரீ எஸ். டி. முருகபூஷணம்**

தலைவர்

**நவசக்தி நிலையம்,** (போன் : 812013)

**153, லாயிட்ஸ் ரோடு,** (ஸ்டேட் பாங்க் எதிரில்)

**கோபாலபுரம், சென்னை-600 086**

**(தெ. இந்தியா)**


'அது கொலையே' என்று நிரூபிக்க முயன்ற பத்திரிகைகள் அப்போதைக்குச் சில நூறு பிரதிகள் அதிகம் விற்றிருக்கலாம். ஆனால் இவர்கள் ஓகோகோ என்று போற்றுகிற ஷோபாவின் நடிப்பாற்றலுக்கும் அவரது நினைவுக்கும் என்ன மரியாதை காட்டினார்கள்?

வாட்டர்கேட் ஊழலை அம்பலப்படுத்திய வாஷிங்டன் போஸ்ட் வெறும் கையை முழம் போடவில்லை; அரும்பாடுபட்டுச் சாட்சியங்களைத் தேடிக் கையில் தயாராய் வைத்துக் கொண்டு கோதாவில் இறங்கியது. இங்கு சில பத்திரிகைகள் கோதாவில் இறங்காமலேயே புழுதியை மட்டும் அள்ளி வீசுகின்றன.

●

வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு உதவிப்பணம் ரூ 50 என்றார் எம்.ஜி.ஆர். ரூ. 75 என்றார் எம். பி. எஸ்.! கடைசியில் இ.கா.-தி.மு.க. கூட்டறிக்கை ரூ. 100 என்கிறது.

''விலைவாசி ஏற்றம் காரணமாக இதுவும் போதாது; குறைந்தபட்சம் ரூ. 200 ஆக உயர்த்துங்கள்'' என வேலையில்லாப் பட்டதாரிகள் இனி கோஷமிட்டு ஊர்வலம் போகலாம்; ஆர்ப்பாட்டம் பண்ணலாம்; உண்ணாவிரதம் இருக்கலாம்; வாய்ப்புக் கிடைத்தால் பஸ்ஸைக் கூடக் கொளுத்தலாம்!

''ரூ. 100 தருவது இடைக்கால நிவாரணமே; தொழிலகங்கள் தொடங்கி வேலை வாய்ப்புக்களைப் பெருக்க முயல்வோம்'' என்ற சில வார்த்தைகளையாவது தேர்தல் அறிக்கையில் சேர்க்கச் செய்ததற்கு மூ. க. வுக்கு நன்றி.

●

தேவன் குடும்பத்துக்கு ரூ.10,000 தரப் போகிறார் ஆளுனர்.

மயிலையில் மூன்று பெண்களிடமிருந்து நகைகளைப் பறிக்க முயன்ற இருவரை மக்கள் விரட்டத் தப்பி ஓடி வந்த அந்த இருவரையும் ஒரு திரும்பு முனையில் மடக்கப் பார்த்தார் டாக்ஸி டிரைவர் தேவன். இதற்கு அவருக்குக் கிடைத்த பலன் கத்திக் குத்து, மரணம்.

''தேவனின் வீரம் மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டும்; அதற்காகத்தான் இந்தப் பத்தாயிரம் ரூபாய் பரிசு'' என்று கூறினார் ஆளுனர்.

மற்ற டாக்ஸி டிரைவர்கள் தங்கள் வீரத்தைக் காட்ட தேவன் போலச் சாகசங்கள் செய்து உயிர் துறக்க வேண்டாம். பயணிகளிடம் கருணை காட்டி அவர்களிடம் பணத்தைப் பிடுங்காமல் இருப்பதே மாவீரம்தான்!

''மீட்டருக்கு அதிமாகக் காசு வாங்கமாட்டேன்; பயணி எங்கு அழைத்தாலும் வருவேன்; ஒரு குழுவினர் டாக்ஸியில் ஏறிய பிறகு அவர்களுக்குச் சம்பந்தமில்லாத இன்னொருவருக்குக் கதவைத் திறந்து விட மாட்டேன்'' என்று எழுதிக் கையெழுத்திட்டு, பாட்ஜ் நெம்பர், விலாசத்துடன் தம் புகைப் படத்தையும் அனுப்பினால் அந்த டாக்ஸி டிரைவரின் படத்தையும் பெயரையும் வெளியிட கல்கி தயாராக இருக்கிறது. பார்க்கலாம், எத்தனை பேர் வீரத்துடன் முன்வருகிறார்கள் என்று!

# வாரீர் புதுமை தவழ்ந்திட.




பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு.
லிரில். அலையெறியும் தளதள பச்சை. அதன்
நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக்
குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**
புத்துணர்வு சோப் **மணம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

லின்டாஸ்-LR.27-2012 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# வட்டமேஜை

● பெயர்தான் 'மினி' சிறப்பிதழ். சுவையான செய்திகளிலும் கதைகளிலும் 'மாக்ஸி'!
திருநெல்வேலி 'பாரத்வாஜன்'





● என்ன சார் மின்மினி சிறப்பிதழைப் பேசாமல் 'குயின் ராஜேஸ்வரி ஸ்பெஷல்' என்று போட்டிருக்கலாமே!
கள்ளிடைக்குறிச்சி                    எஸ். கைலாசம்

● To put it in a nut shell Kalki Min Mini Malar "Splendid and Superb."
பாண்டிச்சேரி                    கல்வே எஸ். சதாசிவம்

● டில்லியில் சில நடபாத் நிலையங்களில் சாலை இசை ஒலிப்பது ஒன்றும் புதிதல்ல! சென்னையிலேயே, மயிலாப்பூர்' இந்தியன் பார்க்கில் குதூகல சாதனத்துடன் வாடிக்கைக்காரர்களுக்கு இதமான இன்னிசையும் கேட்க வசதி செய்திருக்கிறார்கள்.
சென்னை-4                    டி. எஸ். சங்கரன்

● இந்த வாரம் என்னத்திற்கு இந்த வைர புராணம்? இதனால் கல்கி நேயர்களுக்கு என்ன புண்ணியமா, புருஷார்த்தமா?
படாளம்                    டி. எஸ். வீரராகவன்

● 'இந்த வாரம் சந்தித்தேன்' பகுதிக்குக் குமுதத்துக்கு அனுப்புவதை, தவறுதலாக கல்கி அலுவலகத்துக்கு அனுப்பி விட்டாரோ என்று நினைக்கத் தோன்றுகிறது.
கும்பகோணம்                    டி. எஸ். சீதாராமன்

● கனிநூரின் கடைசிப்பக்கம் ''எங்கிருந்தோ வந்தான் கண்ணன், இடைச்சாதி என்றான்... மந்திரியாய் நல்லாசிரியனுமாய்ப் பணிகள் செய்திடுவான்...'' எனும் பாரதியின் பாடல் வரிகளை நமக்கு நினைவுறுத்துகின்றன!
வீரபாண்டி                    வதிலை அன்புச்செல்வன்

● 'இரக்கமற்ற இரவுகள்' கதைக்குப் படம் வரைந்த ஓவியர் ஒன்றை மறந்து விட்டாரே! பின்னணியில் நிற்கும் மூன்று பேரில் ஒருவன் கிட்டன் என்று வைத்துக் கொண்டாலும், மூன்று பேரில் ஒருவனுக்கும் தாடியைக் காணோமே!
பம்பாய்—71                    எஸ். ஜெயராமன்

● 'அளவானதில் ஓர் அழகு', என்ற திரு கி. எஸ். மகாதேவன் அவர்களின் கட்டுரை நமது நாட்டின் திட்டமிடுபவர்களும், ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்களும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய அரிய கருத்துக்களைக் கொண்ட சுருளும். கிராமங்களும் அவற்றின் நிரந்தர வறுமையும் எவ்வாறு சந்திக்கப்பட வேண்டுமென அழகாக வலியுறுத்திக் கூறியுள்ளார்.
நாகர்கோவில்                    ஆர். சரவணை

● ''திருக்குறளைப் பற்றி'' என்ற தலைப்பின் கீழ் ''அணுவைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டி குறுகத் தறித்த குறள் — ஔவையார்

※ விழுப்புரம் க. கி. குமார் மின் மினி சிறப்பிதழைப் பாராட்டி அனுப்பிய மினி அஞ்சல் அட்டை.

என்று கொடுத்திருக்கிறீர்கள். இது தவறு. திருவள்ளுவர் குறள் அரங்கேற்றம் செய்யச் சென்ற போது ''இடைக்காட்டு''ச் சித்தர்தாமும் உடன் சென்று, அது அரங்கேறிய பின், சங்கத்தார் சிறப்புப்பாயிரம் கூறக் கேட்டு, இடைக்காட்டுச் சித்தரும், 'கடுகைத் துளைத்து ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத்தறித்த குறள்' என்று அதன் மேல் புகழ்ந்து பாடினார். ஔவையார் அல்ல. ஆதாரம்... ''நம் நாட்டுச் சித்தர்கள்'' டாக்டர் இரா. மாணிக்கவாசகம்.
குரோம்பேட்டை                    வி. கன்னையா

● 'சோகத்தில் முடிந்த வீரக் கதை!' என்ற தலையங்கம் படித்தேன். அமெரிக்க மக்களைப் பற்றி நெப்போலியன் கூறிய வாசகங்கள் நினைவுக்கு வந்தன.
It is Striking Coincidence that American ends with "I can"
தாரமங்கலம்                    என். மணி

● நம் நாட்டுக்குத் தலையாய பிரச்னை அமெரிக்க பணயக் கைதிகளே! அமெரிக்கப் பண முதலைகள் அடிவருடும் கல்கி பத்திரிகை நீண்ட நாள் வாழ்க! உங்கள் பணி என்றும் சிறக்க கார்ட்டர் தெய்வத்தை நாம் வணங்குவோமாக.
சென்னை—31                    இரா. நாராயணன்

● அமெரிக்காவைக் கண்டனம் செய்பவர்கள் வெறும் வறட்டுக் கொள்கை வாதத்துக்காகக் கண்டனம் செய்கிறார்கள். இராவணனிடமிருந்து சீதையை மீட்க இராமன் நடவடிக்கை எடுத்தது கூட தவறு?
முசிறி                    ஆர். சாம்பமூர்த்தி

● சவன் எழுதியிருந்த 'ஷோபாவின் சோக முடிவு' கட்டுரையில் 'பலர் இறந்தவர் வீட்டுக்குச் செல்கிறோம் என்ற எண்ணமே இல்லாமல் கவர்ச்சிகரமான ஆடை ஆபரணங்களுடன் வந்தது பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அன்று அவரது வீட்டுக்கு வெளியே கூடியிருந்த பெரும் கூட்டத்தினரில் அதிகம் பேர் அங்கு வருகின்ற திரைப்படக் கலைஞர்களைக் கண்டவுடன் கைதட்டியும் விசில் அடித்தும் ஆரவாரக் குரல் எழுப்பியும் வரவேற்றது பெரும் வேதனையாக இருந்தது.
சென்னை—78                    'தாத்'

## பெயர்தான் மினி, தரத்தில் 'மாக்ஸி!'

# கல்கி

ஜூன் 22

## திரைக்கதை சிறப்பிதழ்

ஜெயலலிதா தயாரிக்கிறர்

இதே இதழில்

ஜெயலலிதா

எழுதும்

## உறவின் கைதிகள்

தொடர்கதை ஆரம்பமாகிறது




கடற்கரையிலிருந்து வீடு திரும்பிய ரவி நேராகத் தகப்பனாரின் கட்டிலில் சென்று அவர் அருகில் அமர்ந்து கொண்டான். அவனைக் கண்டதும் அவர் கண்களில் ஒரு ஒளி தோன்றியதை அவனால் காண முடிந்தது. தான் அவர் அருகில் அமர்ந்து கொள்வதே அவருக்கு ஒரு ஆறுதலையும் தெம்பையும் அளிப்பதாக அவர் கண்களில் தோன்றிய பிரகாசத்திலிருந்து ஊகித்துக் கொண்டான்.

''சாப்பிட்டீங்களா அப்பா?''

''ஊம்.''

''சாப்பாடு வாய்க்குப் பிடிச்சிருக்கோ இல்லையோ?''

''ஊம்.''

மேற்கொண்டு அவரை என்ன கேட்பது என்று அவனுக்குத் தெரியவில்லை. ஏதாவது கேட்டு அவரால் பேச முடியாத நிலைமையை அவருக்கு ஞாபகப்படுத்துவது அவரைத் துன்புறுத்துவதாகும் என்று அவனுக்குத் தோன்றியது.

அவர் தமது வலது கையினால் அவனது வலது கையைப் பற்றிக் கொண்டு கண்களை மூடிக் கொண்டார்.

# இரக்கமற்ற இரவுகள்



''நீ வந்துட்டியா? எப்ப வந்தே?'' என்று கேட்டுக் கொண்டே அவன் தாயார் அங்கே வந்தாள்.

''இப்பத்தான். அஞ்சு நிமிஷம்கூட இருக்காது. எங்கே ஒருத்தரையும் காணும் வீட்ல?''

''உமாவும் உஷாவும் கபாலி கோவிலுக்குப் போயிருக்கா. வெள்ளிக் கிழமையாயிருக்கே. போய்க் கற்பகாம்பாளுக்கு ஒரு அர்ச்சனையைப் பண்ணிட்டு, நவக்கிரகப் பிரதட்சிணமும் பண்ணிட்டு வரேன்னு போயிருக்கா. வந்துடற நேரம்தான்.''

''தாத்தா?''

''அவர் சபாவுக்குப் போயிருக்கார். இன்னிக்கு பாலகிருஷ்ண சாஸ்திரிகள் கதை இருக்குன்னு சொன்னார்.''

''அப்பா என்ன சாப்பிட்டார்? சாப்பிடறதுக்கு ஒண்ணும் கஷ்டமா யில்லியே?''

''எல்லாத்தையும்தான் சாப்பிட்டார். ஆனா ரொம்ப மெதுவாத்தான் சாப்பிட முடிஞ்சுது.'' என்று கூறிவிட்டுக் குரலைச் சிறிது தாழ்த்திக் கொண்டு ''அதுக்கும் நாக்குப் புரள வேண்டாமா?'' என்றாள்.



ஹேமா ஆனந்ததீர்த்தன்

சிறிது நேரம் ஒருவரும் ஒன்றும் பேசவில்லை.

பிறகு ஜானகி கேட்டாள்: ''எங்கே, அந்தப் பெண்ணை வீட்டுக்குக் கொண்டு போய் விட்டுட்டு வந்தியா?''

''இல்லேல்லே'' என்று மட்டும் சொல்லி நிறுத்திக் கொண்டான் ரவி.

கடற் கரைக்குப் போயிருந்ததைச்சொல்ல வேண்டுமா வேண்டாமா என்று ஒரு தீர்மானத்துக்கு வர முடியாததால் பேசாமலிருந்தான்.

''அப்படின்னா இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தே?'' என்று கேட்க வேண்டும் என்று தோன்றியது அவன் தாயாருக்கு. ஆனால் அவனாகச் சொல்லாமலிருக்கும்போது நாமாகக் கேட்டால் அது அவனுக்குத் தர்ம சங்கடமாக இருந்தாலும் இருக்கலாம் என்று தோன்றியது. இருந்தாலும் அவன் அவளை வீட்டுக்கு அனுப்பிவிட்டுத் தனியாக எங்காவது போய்விட்டு வந்தானா அல்லது இருவரும் சேர்ந்து எங்காவது போயிருந்தார்களா என்று தெரிந்து கொள்வதிலும் அவளுக்கு ஆர்வம் இருந்தது.

''இவ்வளவு நேரமாச்சே, காணல்லையே, அவா வீட்டுக்குத்தான் போயிருப்பியோன்னு நினைச்சேன்'' என்று மறைமுகமாகத் தன் கேள்வியைக் கேட்டாள்.

இனி பதில் சொல்லாமல் இருப்பது நன்றாக இருக்காது என்று ரவிக்குப் பட்டது. யாரிடமும் அவனுக்குப் பொய் சொல்லிப் பழக்கம் கிடையாது. அதிலும் அவன் தாயாரிடத்தில் அவனால் உண்மையை மறைக்கவே முடியாது. அப்படிப் பார்த்தால், தான் கடற் கரைக்குப் போனது தவறென்றோ, கூச்சப்பட வேண்டிய அல்லது அவமானப் படவேண்டிய காரியம் என்றோ ஏன் தானாகவே நினைத்துக் கொள்ள வேண்டும்?

''இல்லேம்மா மனசுக்கு நிம்மதியாக் கொஞ்ச நேரம் எங்கேயாவது போய் உட்கார்ந்திருக்கணும்னு தோணிச்சு. சாந்தோம் பீச்சுக்குப் போய் உட்கார்ந்திண்டிருந்தோம். திரும்பி வரச்சே லஸ்ஸிலே அவ அந்தப் பக்கம் போனா, நான் இப்படித் திரும்பி வந்தேன்'' என்றான்.

''சாப்பிட வர்றியா?''

''உம், உஷா வந்துடட்டுமே, எல்லாரும் ஒண்ணாச் சாப்பிட்டால் போறது.''

அன்று இரவு ரவி படுக்கையில் படுத்து வெகு நேரம் புரண்டு கொண்டிருந்தான். கூடத்துக் கடிகாரத்தில் பதினொன்று, பதினொன்றரை, பன்னிரண்டு அடிப்பதையெல்லாம் கேட்டான். தூக்கமே வரவில்லை. ஏதேதோ யோசனைகள், கவலைகள், நினைவுகள் அவன் மனத்தில் தோன்றிக்கொண்டே இருந்தன. சில இன்ப நினைவுகள், சில துயர நினைவுகள், சில இரண்டுமற்ற வெறும் நினைவுகள்.

அவன் தகப்பனார் சாதாரணமாக மகிழ்ச்சியோ துயரமோ எதையுமே வெளியில் காண்பித்துக் கொள்ள மாட்டார். பார்ப்பவர்களுக்கு அவர் மனத்தில் நிலவும் உணர்ச்சியின் தன்மை என்னவென்று புரிந்து கொள்வதே கஷ்டம். ஆனாலும் உணர்ச்சி

பற்ற ஜடமோ, இன்ப துன்ப உணர்வுகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட யோகியின் பக்குவத்தை அடைந்துவிட்ட மனமோ அல்ல அவருடையது. மனத்திலுள்ளதை ஆர்ப்பாட்டமான செயல்களாலும் பேச்சுக்களாலும் வெளிக்காட்டிக் கொள்ளாத, அடக்கமான சுபாவம். அவ்வளவுதான்.

அப்படிப்பட்டவர் ரவி பி. ஏ. தேறிய போது அந்தச் செய்தியைக் கேள்விப்பட்டதுமே தமது வழக்கத்துக்கு விரோதமாகத் தமது மகிழ்ச்சியைச் சிறிது அதிகமாகவே வெளிப்படுத்தினார். மூத்த மகன் பாலுவின் பேரில் அவர் வைத்திருந்த நம்பிக்கையெல்லாம் உடைந்து தகர்ந்து தரை மட்டமானதுதான் காரணமாக இருக்கலாமோ என்னவோ!

ஒரு நாள் இரவு அந்தச் செய்தி வந்தது. ரவி பரீட்சையில் தேறிவிட்டான் என்கிற செய்தி. மறுநாள் தான் சர்வ கலாசாலைக் காரியாலயத்தில் தேர்தல் முடிவுகள் உத்தியோக பூர்வமாக வெளியிடப்படவிருந்தன. சர்வ கலாசாலையில் வேலையில் இருந்த அவர்களுடைய தூரத்து உறவினர் ஒருவர் மூலமாக - 'பிரைவேட்'டாகக் கிடைத்த செய்தி. இவ்வளவுக்கும் ரவி இரண்டாவது வகுப்பில்தான் தேறியிருந்தான். முதல் வகுப்புக் கூடக் கிடைக்கவில்லை.

''போதும் போதும். எந்தக் கிளாஸா இருந்தால் என்ன? நானும் செகண்ட் கிளாஸில்தான் பாஸ் செய்தேன். 'பாஸ் செய்தானே, அதுவே போதும். நான் போய் சாக்லேட் வாங்கிக் கொண்டு வருகிறேன்'' என்று புறப்பட்டு விட்டார் அவன் அப்பா.

அம்மா சொன்னாள்: ''இப்ப ஏன் அவசரப்படணும்? நாளைக்கு ரிஸல்ட் வந்துடட்டுமே?'' என்று.

''ஏன், உனக்கு இன்னும் சந்தேகமா? அவர் சரியாத்தான் பார்த்துண்டு வந்திருப்பார். இப்ப நான் சாக்லேட் வாங்கிண்டு வரேன். எல்லாரும் சாப்பிடுவோம். நாளைக்கு ரிஸல்ட் அஃபிஷியலா வந்ததும் நீ மைசூர் பாகு கிளறு என்ன?'' என்று சொல்லிவிட்டுக் கடைக்குப் போய் ஒரு கிலோ பாரி மிட்டாய்கள் வாங்கிக் கொண்டு வந்துவிட்டார்.

அவர் விருப்பப்படியே மறுநாள் அம்மா மைசூர்பாகு போட்டாள். இனிப்பு அதிகம் சாப்பிடாத அப்பா இரண்டு மூன்று துண்டுகள் சாப்பிட்டார்.

---

''உன் தம்பியைப் போல் தூரத்து உறவு என்கிறாயே ஏன்?''
''அவன் ஆஸ்திரேலியாவில் அல்லவா இருக்கிறான்!''
- பிரியா பாலு





அதற்கு முன்பாகட்டும், பின்பாகட்டும் அவர் ரவியோ, உமாவோ, உஷாவோ வேறு பரீட்சைகளில் தேறியபோது அப்படி ஒரு மகிழ்ச்சியைக் காட்டவேயில்லை.

ரவி தனக்கு ஏதாவது ஒரு பாங்கில் வேலை செய்யத்தான் விருப்பம் என்று பேச்சுவாக்கில் சொல்லியிருந்தான். அவனுக்கு அந்த பாங்கில் வேலை கிடைப்பதற்காக அவன் தகப்பனார் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஒரு பதினைஞ்சு நாட்கள் அதே காரியமாக அலைந்தார். ரிசர்வ் பாங்க் அதிகாரிகள் சிலரைப் போய்ப் பார்த்தார். பாங்கின் தலைமைக் காரியாலயம் பெங்களூரில் இருக்கிறது. பெங்களூருக்கு ரவியைக் கூட்டிக் கொண்டு ஒரு நடை போய், பாங்கின் உயர் அதிகாரிகள் சிலபேரைப் பார்த்துப் பேசி எப்படியோ ரவிக்கு அந்த பாங்கில் வேலை வாங்கிக் கொடுத்து விட்டார்.

மற்ற குழந்தைகளின் பேரில் இல்லாத ஒரு தனி அன்பு தன்பேரில் அவருக்கு இருப்பதாக ரவிக்குத் தோன்றியது. அது வெறும் பிரமையாக இருக்கலாம். அல்லது உண்மையாகவும் இருக்கலாம். நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. உண்மையாக இருக்குமானால் அதற்கு என்ன காரணம் இருக்கக் கூடும்? ஒருகால் அவருக்குப் பின் அந்தக் குடும்பத்தை ஆதரித்துக் காப்பாற்ற வேண்டியவன் அவன்தான் என்ற எண்ணத்தினாலா?

அவர் உயிருக்குப் பயமில்லை என்று டாக்டர் சொல்லியிருந்த போதிலும் கூட.. ரவியின் உள்ளத்தில் ஏதோ ஒரு அச்சம் மூண்டுவிட்டது. தன் தகப்பனாரால் வெகு நாட்கள் கை கால்களை முடக்கிக் கொண்டு படுக்கையில் படுத்திருக்க முடியாது. திடீரென்று ஒரு நாள் அவர் கதை முடிந்துவிடும். இந்த எண்ணம் தோன்றியதுமே அவன் கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுக்கத் தொடங்கியது. தன் சிந்தனையோட்டத்தை வேறு வழியில் திருப்பா விட்டால் குரல் எடுத்து அழுது விடுவோமோ என்ற பயம் தோன்றவே சிரமப்பட்டுத் தகப்பனாரைப் பற்றிய சிந்தனைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றான்.

தூக்கம் தற்காலிகமாக அவனைச் சிந்தனைகளிலிருந்து விடுவித்து அமைதியில் கிடத்திற்று. கடிகாரத்தில் ஒரு மணி அடித்ததை அவன் காதுகள் கேட்கவில்லை.

சரோஜாவும் நாகுவும் ஆளுக்கொரு சாமானைத் தூக்கி கொண்டு அந்த அறைக்குள் பிரவேசித்ததும், குப்புசுவாமி, ''வா நாகு வா'' என்று வரவேற்றார்.

நாகராஜன் சூட் கேஸை அங்கேயிருந்த பெஞ்சியின் மேல் வைத்துவிட்டுக் குப்புசுவாமியின் வரவேற்புக்குப் பதிலாக ஒரு புன்னகையை வீசியபடி அவர் எதிரே இருந்த நாற்காலியில் வந்து அமர்ந்து கொண்டான். உட்காரும்போதுதான் மற்றொரு நாற்காலியில் அமர்ந்திருந்த ராதாவைக் கவனித்தான். அவன் கவனிப்பதைக் கண்ட ராதா மரியாதைக்காகப் புன்னகைத்தாள்.

''என்ன ராதா, எப்படி இருக்கே?'' என்று கேட்டான்.

''ஐ எம் ஓ.கே'' என்றாள் ராதா.

''சௌக்கியமா இருக்கேளா, அத்திம்பேர்?'' என்று குப்புசுவாமியை விசாரித்தான்.

''ஊம்: நீ இப்பத்தான் வரியா? எங்கே மதுரையிலேருந்துதானே?''

''ஆமாம்.''

''இப்ப ஏது வண்டி? மணி ஒன்பதுக்கு மேலாகப் போறாப்பலே இருக்கே?''

''திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ்தான். வண்டி அநியாயமா லேட்.''

''மதுரையிலே எல்லோரும் சௌக்கியம் தானே?''

''ஊம்.''

''வரேன்னு ஒரு லெட்டர்கூடப் போடல்லியே? இல்லே உங்கக்காவுக்கு எழுதியிருந்தியோ?'' என்று சரோஜாவைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்துக் கொண்டே கேட்டார்.

''ஆமா. எனக்கு எழுதியிருந்தான். அந்த லெட்டர்லெ இன்னும் ரகசியமான சமாசாரங்கள் எவ்வளவோ எழுதியிருந்தான். அதனாலே கடுதாசியை உங்களுக்குக் காட்டல்லே.'' என்றாள் சரோஜா, தம்பியைப் பார்த்து முறுவலித்தபடி.

''லெட்டரைக் காட்டாட்டாப் போறது சமாசாரத்தை மட்டுமாவது சொல்லியிருக்கலாமே?''

''அப்ப நீங்க சும்மா விட்டுடுவேளா? எங்கே நாகுவோட லெட்டர்? என்ன எழுதியிருக்கான்னு பார்க்கலாம் என்று துளைத்து எடுத்துட மாட்டேளா?'' என்று குறும்புப் பேச்சைத் தொடர்ந்தாள் சரோஜா.

தன் அக்காவும் அத்திம்பேரும் கிண்டலாகப் பேசி விளையாடிக் கொண்டிருப்பதை நாகு ரசித்தான்.

''நான்தான் சோம்பேறின்னு உங்களுக்கு நல்லாத் தெரியுமே, அத்திம்பேர். லெட்டர் போடல்லே. அதுவுமில்லாம, திடீர்னு புறப் படும்படியா ஆச்சு.''

''என்ன விசேஷம்? ஒரு பத்து நாளைக்கு இருப்பியா?''

''ரெண்டு காரியமா வந்திருக்கேன். நாளையிலேருந்து மூனு நாளைக்கு யூனிவர்ஸிடியிலே ஆல் இண்டியா எகானமிஸ்ட்ஸ் கான்ஃப ரன்ஸ் நடக்கிறது. அதை அட்டெண்ட் பண்ணணும். இரண்டாவது, யூனிவர் ஸிடிலே அஸிஸ்டண்ட் புரொபஸர் வேலைக்கு அப்ளை பண்ணியிருக்கேன். அதுக்கு இண்டர் வ்யூவுக்கு அழைப்பு வந்திருக்கு.''

''குட். இப்பவே நீ அஸிஸ்டண்ட் புரஃபஸர் இல்லியோ உங்க காலேஜ்லே?''

''இல்லே. ஐ எம் ஒன்லி எ லெக்சரர்.''

''நாகு படிப்பில் நல்ல கெட்டிக்காரன் ராதா. உனக்குத் தெரியுமோ? எல்லாக் கிளாஸ்லேயும் பர்ஸ்ட்தான்.''

ராதா முறுவலித்தாள்.

''பேசவே மாட்டேங்கறயே? யூ ஹேவ் க்ரோன் அப் வெரி ஃபாஸ்ட்'' என்றான் நாகு ராதாவை நோக்கி.

''அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லே. அப்பாவோட பேசிண்டிருக்கேனேன்னு நான் பேசாம இருந்தேன்.''




சரோஜா பேச்சில் கலந்து கொண்டாள். ''உனக்கு இந்த வேலை கிடைச்சுட்டுதுன்னு, இங்கியேதான் வந்திருக்கணும் இல்லியா?''

''ஆமாம்.''

''கிடைச்சுடுமா?''

''நம்பிக்கை இருக்கு. பார்ப்போம்.''

''அப்படி மெட்ராஸுக்கு வந்துட்டியானு இங்கே நம்ம வீட்டிலேயே இருந்துக்கலாம்'' என்று நாகுவிடம் சொல்லிவிட்டுக் குப்பு சுவாமியின் முகத்தைப் பார்த்தாள்.

''கண்டிப்பா. பின்னே ஹோட்டல்லேயும் ஹாஸ்டல்லேயும் இருக்க விட்டுட முடியுமா?'' என்று குப்புசுவாமி அவளை ஆமோதித்தார்.

''கல்யாணம் பண்ணிண்டிருந்தான்னா வது தனிக் குடித்தனம் வைக்கலாம். இப்படிப் பிரம்மச்சாரியாவே காலத்தை ஓட் டிண்டிருக்கானே.... பொண்ணு ஒண்ணும் வரல்லியா?'' என்று முதல் பாதிப் பேச்சைக் குப்புசுவாமியை நோக்கியும் மீத பகுதியை நாகுவைப் பார்த்தும் கேட்டாள் சரோஜா.

''பொண்களுக்கென்ன குறைச்சல்? தின மும் யாராவது வந்து ஜாதகத்தைக் கொடு, கோத்திரம் என்னன்னு அப்பாவையும் அம் மாவையும் துளைச்சுண்டுதான் இருக்கா.''

''பின்னே ஏன் கல்யாணம் பண்ணிக்காம இருக்கே இன்னும்?'' — சரோஜா.

''ஒண்ணும் சரியா அமையலே.''

''உனக்கென்ன வயசு இப்போ?'' என்று குப்புசுவாமி கேட்டார்.

''முப்பதைக் கூடிய சீக்கிரம் தாண்டிடு வேன்'' என்றான் நாகு.

''அப்ப சீக்கிரம் பண்ணிண்டுட வேண் டியதுதான். இனிமே டிலே பண்ணினு அப் புறம் கல்யாணம் ஆறது ரொம்பக் கஷ்ட மாய்ப் போயிடும்!'' என்றார் குப்புசாமி.

''அதனாலே ஒண்ணும் நஷ்டமில்லேன்னு எனக்குத் தோன்றது. இப்படியே இருந் துட்டுப் போறேன்'' என்று கூறிச் சிரித்தான் நாகு.

''உன் மனசுக்குப் பிடிச்ச பொண்ணு வரல்லியா? லௌகிக காரியங்கள் சரியா அமையலியா? ஜாதகங்கள் ஒத்துக்கலியா?'' குப்புசுவாமி கேட்டார்.

''ஒவ்வொரு பிரபோசல்லேயும் ஒவ் வொரு தகராறு.''

"பொண் ரொம்ப அழகா இருக்கணும்னு எதிர்பார்க்கிறான் போலிருக்கு" என்றார் குப்புசுவாமி, சரோஜாவைப் பார்த்து.

"அதிலென்ன தப்பு? அவன் அழகுக்கு அவன் அப்படி எதிர்பார்க்க வேண்டியது தானே?" என்று திருப்பிக் கேட்டாள் சரோஜா. நாகு — தன் தம்பி — அழகன் என்ற பெருமை அவள் முகத்தில் பிரகாசித்தது.

"ராதாவுக்குக் கல்யாணம் பண்ற உத்தேசம் இல்லையா?" என்று கேட்டான் நாகு.

ராதா தலையைக் குனிந்துகொண்டாள்.

ஏனோ நாகுவின் அந்தக் கேள்வி அவளுக்குப் பிடிக்கவில்லை. தகப்பனார் தன்னோடு அந்த ரங்காசாக ரவியைக் குறித்து ஏதோ பேச முற்பட்ட சமயத்தில் நாகு வந்து குறுக்கிட்டு விட்டதனால் அந்தப் பேச்சு அப்படியே நின்றுபோய் விட்டதிலே அவளுக்கு ஏமாற்றம். நாகுவின் இந்தக் கேள்விக்கு என்ன பொருள்? வெறும் சம்பிரதாயத்துக்காகக் கேட்கப்பட்ட கேள்வியா? அல்லது அதற்கு ஏதாவது உட்பொருள் உண்டா? தன் அப்பாவோ அம்மாவோ அதற்கு என்ன பதில் சொல்லப் போகிறார்கள்? அவள் காதுகள் ஆர்வத்தோடு காத்திருந்தன. அவள் இதயம் படபடவென்று அடித்துக் கொள்ளத் தொடங்கியது.

"நீ ராதாவைப் பண்ணிக்கிறியா?" என்று கேட்டுவிட்டால்?

"எனக்கு ஆட்சேபனை இல்லே" என்று நாகு சொல்லிவிட்டால்?

தான் என்ன சொல்ல வேண்டியிருக்கும்? இந்த இக்கட்டுத் தனக்கு ஏற்பட்டுவிடாமலிருக்க வேண்டுமே என்று அவள் மனம் இதற்குள்ளாகவே தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண்டது.

அவள் பிரார்த்தனை பலித்தது போல இருந்தது. குப்புசுவாமி நாகுவுக்கு அளித்த பதில்.

"அவளுக்குக் கல்யாணத்துக்கு என்ன அவசரம் இப்போ? வயசு இருபத்தொன்று தானே ஆறது? வேலைக்குப் போயிண்டிருக்கா. இன்னும் கொஞ்ச நாள் போகட்டும்கறது என்னோட அபிப்பிராயம். ஆனா, உங்க அக்கா என்ன நினைச்சுண்டிருக்காளோ? ராதா மனசிலே என்ன இருக்கோ?" என்று கூறிக் குப்புசுவாமி ராதாவைப் பார்த்துக் கண் சிமிட்டினார்.

"நீங்க சொல்றது கரெக்ட் அப்பா. எனக்கு இப்போ அதைப்பத்தி எண்ணமே இல்லே" என்றாள் ராதா.

"நீங்க நினைக்கிறபடியும் அவ நினைக்கிற படியுமெல்லாம் ஒண்ணும் நடக்காது....' என்று சரோஜா ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

"அதை ஒத்துக்கறேன். நீ இருக்கச்சே நீ சொல்றபடி நடக்காம நாங்க சொல்ற படியா நடக்கும்?" என்று கூறிச் சிரித்த படியே ஜிண்டான் பாட்டிலைத் திறக்கத் தொடங்கினார் குப்புசுவாமி.

"அதுக்குள்ளே.... உங்க கிண்டலே ஆரம்பிச்சுட்டேளே! நான் சொல்ல வந்ததை முழுக்கக் கேட்டுட்டு அப்புறம் பேசக் கூடாதா?" என்று சரோஜா பெருமை பொங்கக் கணவனைக் கடிந்து கொண்டாள்.

"சொல்லு."

"வேலைன்னு வந்துட்டா திடுதிப்புன்னு கல்யாணம் நிச்சயமாயிடும். நடக்கவும் நடந்துடும். அப்புறம் நினைச்சுப் பார்த்தா எல்லாம் கனவுலே நடந்தது போலிருக்கும். நாம நினைக்கிறபடியெல்லாம் ஒண்ணும் நடக்கும்னு சொல்ல முடியாது" என்று சரோஜா சொன்னாள்.

"அதை இல்லேன்னு நான் சொல்லலே. அப்படிச் சில கேசுகளில் நடக்கலாம். இன்னும் சில கேசுகளில் வேலை வராமலே போயிடலாம். எவ்வளவுதான் உடனே கல்யாணத்தை நடத்திடணும்னு சம்பந்தப்பட்டவா எல்லாரும் நினைச்சாலும் கல்யாணம் தள்ளிண்டே போகலாம். வேலை வர்றதுங்கறது அப்படியும் இருக்கலாமில்லியா?" என்று குப்புசுவாமி கேட்டார்.

"நீங்க பேசறது எனக்குப் பிடிக்கலே. சுபமாகக் கல்யாணத்தைப் பத்திப் பேசும் போது ஏன் இப்படித் தள்ளிப் போகலாம், வேலை வராமலே போயிடலாம்னெல்லாம் பேசணும்? அது அச்சானியமாப் படறது எனக்கு" என்று கவலையோடு சொன்னாள் சரோஜா.

"நீ பேசறதைப் பார்த்தா ராதாவுக்குச் சீக்கிரமே கல்யாணத்தைப் பண்ணிடணும்னு நீ நினைக்கிறாப்பலே இருக்கு?"

"ஆமா. எனக்கு அப்படித்தான் எண்ணம்."

"சரி. அப்ப அப்படியே செய்வோம். அதுக்கு முன்னாடி நாகுவுக்குச் சாப்பாடு கீப்பாடு ஒண்ணும் வேண்டாமா? இப்படியே பேசிண்டே இருந்துட்டா சாமா அங்கே எல்லாத்தையும் ஒழிச்சு பத்துத் தேய்க்கப் போட்டுடப் போறான்" என்று தமாஷாக அந்தப் பேச்சை முடித்தார்.

சரோஜா நாகுவைச் சாப்பிட அழைத்துச் சென்றாள்.

"ராதா, நீ இங்கேயே இரு. நாம பேசிண்டிருந்ததைப் பேசி முடிச்சுடுவோம்" என்றார் குப்புசுவாமி. (தொடரும்)

---

## ஒரு விளக்கம்!

எலும்புக் கூடு : ஸ்ட்ரிப்டீஸ் நடனத்தை கொஞ்சம் அதிகப்படியாகச் செய்து விட்ட நபர்!

-பிரியா பாலு



# எடுத்துச் சொன்னார் ஒருவர், ஏற்றுக் கொண்டார் மற்றவர், அடைந்தனர் இருவரும் லாபம், அதுவே நல்ல விவேகம்!

இருவரும் இப்போது சேமிப்பில்
காட்டுகின்றனர் வேகம்!



ஒருவர் மற்றவருடைய அனுபவத்திலிருந்து பயனடைவதே விவேகமான செயலாகும். இவ்விருவரும் சேமித்திட முடிவு செய்துள்ளனர். எனவே இவர்தம் குடும்பம் நல்வாழ்வு பெறுவது திண்ணம். பாங்க் ஆஃப் பரோடாவில் சேமிப்பு கணக்கு வைத்துள்ள இலட்சக்கணக்கான இல்லத்தரசிகளே இந்த விவேகத்தின் சான்றாக உள்ளனர். இயன்ற போதெல்லாம், இயன்ற அளவு இவர்கள் சேமித்துக் கொண்டிருப்பதன் மூலம், தங்கள் குடும்பம் செழிப்புடன் விளங்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளனர்.

பாங்க் ஆஃப் பரோடாவில், சேமிப்பு கணக்கு மட்டுமின்றி இன்னும் நல்ல பல திட்டங்கள் உண்டு. நீங்கள் நல்ல முறையில் சேமித்திட அவைகள் உதவுகின்றன.

நீங்களும் சேமிக்கத் தொடங்குங்கள்—நீங்களும் உங்கள் குடும்பமும் நல்வாழ்வு நோக்கி நடைபோடவே.

கீழ்க்கண்ட திட்டங்களில் உகந்ததைத் தேர்ந்தெடுங்கள்:

1. மந்த்லி இன்கம் பிளான்
2. ஃபிக்ஸட் டெபாஸிட் பிளான்
3. ரெகுலர் இன்கம் பிளான்
4. ரெக்கரிங் டெபாஸிட் ஸ்கீம்
5. ரெகுலர் இன்கம்-கம்-ரெக்கரிங் டெபாஸிட் பிளான்
6. ஃபெஸ்டிவல் டெபாஸிட் பிளான்

முழுமையான பாங்கிங் வசதிகளையும் சேவைகளையும் பெற, பாங்க் ஆஃப் பரோடா உங்களை முகமன் கூறி வரவேற்கிறது.

**சேமிப்பது ஒரு நல்ல பழக்கம்**




**பாங்க் ஆஃப் பரோடா**

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

ULKA BOB-3/80 TAM

# நரகத்துக்குப் போய்..

**தெலுங்கு: சத்யம் மந்தபாட்டி • தமிழாக்கம்: வேலு**

"இப்போது சியாமளாவுக்கு எட்டு மாதம். ஆறாவது பிரசவம். பிளட் டெஸ்ட் ரிப்போர்ட்டில் ஹீமோகுளோபின் 30 சதமே இருக்கிறது. மேலும் இந்த முறை டெலிவரி மிகவும் கஷ்டம்....." என்றாள் டாக்டர் அனுசுயா.

பிரபாகரன் அப்போதே அந்த இடத்தை விட்டு நகர்ந்தான். அனுசுயா சிறிது நேரம் ஒன்றும் பேசவில்லை.

குனிந்த தலையை நிமிர்த்திச் சியாமளா டாக்டரைப் பார்த்து "மன்னியுங்கள் டாக்டர் அவருடைய செய்கை மன வேதனையைத் தருகிறது" என்றாள்.

"சியாமளா எனக்கு நன்றாகப் புரிகிறது. நான் இம்முறை உன்னுடைய பிரசவத்துக்கு என்னால் என்ன செய்ய முடியுமோ செய்கிறேன். ஆனால் இம்மாதிரி மனிதர்களைத் திருத்துவது எப்படி என்றுதான் எண்ணுகிறேன்" என்றாள் அனுசுயா.

சியாமளாவின் கலங்கிய கண்கள் அனுசுயாவின் உள்ளத்தை உருக்கின. சியாமளா பிரபாகரன் திருமணம் நடந்த நாள் முதல் இருவருக்கும் டாக்டர் அனுசுயாவிடம் பழக்கமுண்டு.

சியாமளாவுக்கு ஐந்து பெண் குழந்தைகள் இருப்பதும் உடல்நிலை சரியில்லாதது பற்றியும் அனுசுயாவுக்குத் தெரியும். பிரபாகரன் குடும்ப நிலை பற்றியும் அறிவாள்.

சியாமளா குடும்பக்கட்டுப்பாட்டு ஆப்பரேஷனுக்குச் சம்மதித்த போது பிரபாகரன் மறுத்து விட்டான்.

ஆண் குழந்தை இல்லையென்றால் நரகத்துக்குப் போவோம் என்ற மூட நம்பிக்கை பிரபாகரனையும் அவனது பெற்றோர்களையும் விடவில்லை.

சியாமளாவின் தலையெழுத்தோ, பிரபாகரனின் துரதிருஷ்டமோ அவர்களுக்குப் பிறந்தவையெல்லாம் பெண் குழந்தைகளே.

டாக்டர் அனுசுயா ஒவ்வொரு முறை எடுத்துச் சொல்லியும் தட்டிக் கழித்து விட்டான் பிரபாகரன்.

"நான் காலமான பிறகு எனக்கு இறுதிக் கடன் செய்ய ஒரு ஆண் குழந்தை வேண்டாமா? இல்லாவிட்டால் நான் நரகத்துக்கல்லவா போக வேண்டும்" என்றான் பிரபாகரன்.

இம்முறை அவரிடமிருந்து இம்மூட நம்பிக்கையை எப்படியாவது அகற்ற வேண்டும். ஆனால் எப்படி என்ற கேள்வி புரியாத புதிராக இருந்தது அனுசுயாவுக்கு. நரகத்துக்குப் போவோம் என்ற எண்ணம் அவனது மனத்தில் வேரூன்றி விட்டது. அது தவிர அவனது மூட நம்பிக்கைக்குப் பெற்றோர்களும் உடந்தையாக இருக்கிறார்கள். பிரபாகரனை ஆப்பரேஷன் செய்து கொள்ளச் சம்மதிக்க வைக்க வேண்டும். அல்லது சியாமளாவுக்காவது கு. க. ஆபரேஷன் செய்ய அவன் அனுமதி தரவேண்டும். இது நடக்கிற காரியமா? இந்த விஷயத்தைச் சொன்னாலே எரிந்து விழுகிறார்.

டாக்டர் அனுசுயா இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாணப் பல நாட்கள் ஆலோசித்திருக்கிறாள்.

•

ஒருநாள் சாயந்திரம் நான்கு மணிக்கு அனுசுயா, வார்டில் உள்ள நோயாளிகளைப் பரிசோதித்துக் கொண்டிருந்த சமயம் பிரபாகரன் தலைதெறிக்க ஓடி வந்தான்.

"டாக்டர், சியாமளாவுக்கு வலி வந்து விட்டது. ரத்தக் கசிவு ஏற்பட்டு விட்டது. கூட்டிக் கொண்டு வந்திருக்கேன்" என்றான் மூச்சு வாங்க.

அனுசுயா பிரபாகரனை நேருக்கு நேர் பார்த்தாள். பிரபாகரன் குழப்பம் அடைந்த நிலையில் இருந்தான்.

'நர்ஸ்' என்று கூப்பிட்டாள். "லேபர் ரூமுக்குக் கூட்டிக் கொண்டு போங்கள்" என்று சொல்லிக் கொண்டே ரூமை நோக்கிச் சென்றாள்.

லேபர் ரூம் படுக்கையில் வேதனையால் துவண்டு கிடக்கும் சியாமளாவை டாக்டர் அனுசுயா பரிசோதனை செய்தாள்.

"இரத்தக் கசிவு அதிகமாகி விட்டது" என்று சொல்லிக் கொண்டே நர்ஸைக் கூப்பிட்டு ஏதோ சொன்னாள்.

நர்ஸ் வெளியேறிய சில நிமிடங்களில் பிரபாகரனோடு உள்ளே வந்தாள்.

பிரபாகரன் என்ன செய்வதென்றறியாமல் நின்றான்.

"மிஸ்டர் பிரபாகரன்! சியாமளாவின் நிலை கவலைக்கிடமாக இருக்கிறது. ரத்தம் வெளியேறிக் கொண்டிருக்கிறது. என்னால் ஆவன செய்து பிரசவம் சுகமாக முடிய முயற்சி எடுக்கிறேன். ஆனால் ஒரு வேண்டுகோள்...."

"என்ன?" இந்த நிலையிலும் அவனுடைய குரலில் கோபம் தொனித்தது.

இளநகை புரிந்தாள் அனுசுயா. "கோபப்படாதீர்கள். நான் குடும்பக்கட்டுப்பாடு பற்றிப் பேசப் போவதில்லை. அவளுடைய பிரசவம் முடியும் வரை நீங்கள் இங்கே இருந்தால் அவளுக்குத் தைரியமாக இருக்கும். இது என்னுடைய வேண்டுகோள். மாட்டேன் என்று சொல்லி விடாதீர்கள்."

ஆச்சரியப்பட்டான் பிரபாகரன். "இது என்ன? நான் ஏன் இங்கே இருக்கணும்?

கணவன் இருந்ததாகக் கேள்விப்பட்டதே யில்லை. நீங்கள் சொல்லுவது நூதனமாக இருக்கிறது.''

''நோ. மிஸ்டர் பிரபாகரன்! பிளீஸ் டோன்ட் ஆர்கியு எனிதிங் மோர்! சியாமளாவின் முகத்தை ஒருமுறை பார்த்துவிட்டுச் சொல்லுங்கள். நீங்கள் இங்கிருப்பது நல்லதே. பிளீஸ் பி ஹியர் — நர்ஸ் — கிவ் மீ தேட் சிரிஞ்ச்.''

நர்ஸ் கொடுத்த சிரிஞ்சினால் வேதனை மிக்க ஒரு இன்ஜக்ஷன் கொடுத்தாள். வேதனை கூடியதால் சுருண்டு மடங்கிக் கிடந்தாள் சியாமளா.

பிரபாகரன் சியாமளாவையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சியாமளா, பிரபாகரனை அருகில் வரும்படி சைகை செய்தாள்.

பிரபாகரன் வந்து அவளது தலைபக்கமாக நின்றான். சியாமளா பிரபாகரனின் இரு கரங்களையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

பிடிப்பு இன்னும் இருகியது. பல்லைக் கடித்துக் கொண்டு வலியைப் பொறுத்துக் கொண்டாள்.

சியாமளா ஒரு கையால் அவனது கரத்தைப் பற்றிக் கொண்டு, மற்ற கையால் வயிற்றை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். பின் வலி தாங்காமல் இடையிடையே அலறினாள்.

நர்ஸ் வந்தான் — அவள் கையில் ஒரு பாட்டில் பிளட். ''ரத்தம் இன்னும் தேவைப்படும்'' என்று சொல்லிக் கொண்டே அனுசுயா இரத்தத்தோடு உள்ள பாட்டிலைத் தலைகீழாகச் சாய்த்துக் கையில் இரத்தம் ஏற்ற ஏற்பாடு செய்தாள்.

நர்ஸ் உதவி புரிந்து கொண்டிருந்தான். பிரபாகரன் அசையாமல் நின்று கொண்டிருந்தான்.

சியாமளாவின் உடலில் இரத்தம் செலுத்தப் படுகிறது. சியாமளாவுக்கு ரத்தம் வெளி வருகிறது.

நர்ஸ் பிரபாகரனின் கையில் ஒரு பேப்பரைக் கொடுத்துக் கையெழுத்து கேட்டான். ''ஆபரேஷன் செய்துதான் குழந்தையை எடுக்கும்படி இருக்கும் என்று தோன்றுகிறது.'' தனக்கு இந்த ஆப்பரேஷனில் எந்த வித ஆட்சேபணையும் இல்லை என்று எழுதப்பட்ட காகிதத்தில் அவன் கையெழுத்துப் போட்டான்.

அனுசுயா பிளட் பிரஷர் பார்த்துக் கொண்டே இடையிடையே இரத்தம் இறங்குவதை டெஸ்ட் செய்து கொண்டிருந்தாள்.

சியாமளாவுக்கு வேர்த்துக் கொட்டியதால் துணி ஈரமாகி விட்டது. முகம் சிவந்திருந்தது.

சியாமளாவின் கண்கள் பின்புறம் இருந்த பிரபாகரனை நோக்கின. அவனைப் பார்த்த போது மனத்தில் தெம்பு ஏற்பட்டது.

பிரபாகரன் பாக்கெட்டிலிருந்து கர்சிப்பை எடுத்து அவளுடைய முகத்தைத் துடைத்தான்.

''வலி அதிகமாக இருக்கிறதா?'' என்றான் மெதுவாக.

கண்ணாலேயே சியாமளா இல்லை என்று பொய் சொன்னாள்.



''கொஞ்சம் பொறுத்துக்கோ. எவ்ரிதிங் வில் பி ஆல் ரைட்'' என்றான். வாயில் இருந்து வார்த்தைகள் வெளி வந்ததே தவிர மனத்தில் சந்தேகமிருந்தது. சந்தேகத்தை மறைத்துக் கொண்டு கரங்களைப் பற்றிக் கொண்டான். இரத்தம் கொடுப்பது முடிந்தது.

அனுசுயா இரத்தம் தோய்ந்த சிவந்த கிளவ்ஸ்களைச் சரி செய்து கொண்டே சொன்னாள். ''ஆபரேஷன் தேவையில்லை, என்றாலும் தையல் போட வேண்டியிருக்கும்.''

கிளவ்ஸ்களைப் பார்த்துக் கொண்டிருந்த பிரபாகரன் கண்ணை மூடிக் கொண்டு ''உங்கள் இஷ்டம் டாக்டர்'' என்றான்.

சியாமளாவிடம் அனுசுயா தான் சொல்லும்படி செய்யச் சொன்னாள். ''சியாமளா நீ கொஞ்சம் பிரஷர் அப்ளை பண்ண வேண்டும். கொஞ்சம் அதே மாதிரி...ம்... முக்கல் முனகல். ம்..... அப்படிச் செய்தாயானால் அழகான பையன் பிறப்பான். எங்கே இன்னும் ஒருமுறை. மறுபடியும் அதே மாதிரி தான். உன்னை நரகத்திலிருந்து காப்பாற்றப் போகிறவன் — அதேமாதிரி.... ம்..... அப்படித்தான்.''

சியாமளாவுக்கு மிக அசதியாகவும் வேதனையாகவும் இருந்தது. முக்கல் முனகலோடு கண்ணைத்திறக்கவும் மூடவுமாகப்படுக்கையில் இருந்த சியாமளா, அனுசுயா சொன்னபடியெல்லாம் செய்து கொண்டிருந்தாள்.

''குட் கேர்ல், அப்படித்தான் சொல்வதெல்லாம் செய்யணும். எங்கே இன்னொரு முறை....ம்.... வெரிகுட்... வெரிகுட்...''

பிரபாகரனின் மூச்சு கொஞ்ச நேரம்நின்று போனது. அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

சியாமளா அவனுடைய இரண்டு கரங்களையும் அழுத்திப் பிடித்துக் கொண்டாள். பிடியின் அழுத்தம் ஒவ்வொரு நிமிடமும் அதிகமாகிக் கொண்டிருந்தது. அவனுடைய உள்ளங்கை வேர்வை கையில் வழிந்து கொண்டிருந்தது.

சியாமளாவுக்கு வலி கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக் கொண்டேயிருந்தது. அனுசுயா சின்ன ஆயுதம் ஒன்றை எடுத்து தோலை கத்தரித்துக் கொண்டிருந்தாள். இடையிடையே சியாமளாவிடம் ''ஆயிடுச்சு... அப்படித்தான், கொஞ்சம் பொறுத்துக்கோ. ப்ளீஸ்.... வெரிகுட்.... உன்னுடைய வாரிசு வரப் போகுது. அப்படித்தான்'' என்றாள்.

அந்த வேதனையிலும் கழுத்தைச் சாய்த்துப் பிரபாகரனைப் பார்த்தாள். பிரபாகரன் அவளுடைய கன்னத்தில் கை வைத்தான். அவளைப் பார்த்துக் கொண்டே சியாமளா தன் வேதனையை மறக்க முயற்சி செய்து கொண்டிருந்தாள்.

டாக்டர் அனுசுயா காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள். நர்ஸ் நாடி பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். பிரபாகரன் கண் முன் ஏதோ சுழலுவது போல் இருந்தது. சியாமளாவுக்கு வலி அதிகரித்துக் கொண்டே இருந்தது.

திடீரென்று வீலென்று கதறினாள்.

அனுசுயா குழந்தையை வெளியில் எடுக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள்.

சியாமளா வேதனையால் ஓலமிட்டாள். கதறிக் கொண்டே தலையை ஒரு பக்கம்சாய்த்தாள்.

பிரபாகரனின் உடல் முழுவதும் வியர்த்திருந்தது. தன்னைச் சுற்றி உள்ள பொருட்கள் எல்லாம் சுழலுவது போல் தோன்றியது பிரபாகரனுக்கு. அதன்பின் என்ன நடந்தது என்று அவனுக்கே தெரியாது.

கண்களைத் திறந்து பார்த்த போது அவன் ஒரு பெஞ்சில் படுத்திருந்தான். அருகில் ஒரு நர்ஸ் பஞ்சில் ஏதோ மருந்தைத் தடவி மூக்குக்கு நேரே பிடித்துக் கொண்டிருந்தாள். பிரபாகரன் சட்டென்று எழுந்து அமர்ந்தான். அவனருகில் துயரத்தோடு நின்று கொண்டிருந்த அப்பா, அம்மா குழந்தைகளைக் கண்ட பின், ''சியாமளா.... சியாமளா எங்கே'' என்று துயரத்தோடு கேட்டான்.

கையைத் துடைத்துக் கொண்டு வெளியே வந்த அனுசுயாவையும் அதையே கேட்டான்.

''டெலிவரி ஆனதும் மயக்கம் ஆனாள். இப்போது நன்றாக இருக்கிறாள். நீங்கள் மயக்கம் போட்டு விழுந்து விட்டீர்கள்'' என்றாள் அனுசுயா.

அனுசுயாவுடன் பிரபாகரன் சியமளா படுத்திருக்கும் அறைக்குள் சென்றான். சியாமளாவையும் குழந்தையையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் என்ன சொல்லப் போகிறானோ-என்ற பயத்தோடு சியாமளா அவனைப் பார்த்தாள்.

பிரபாகரன் அனுசுயாவின் பக்கம் திரும்பி, ''எக்ஸ்கியூஸ் மீ டாக்டர், என்னை மன்னியுங்கள். நான் இவ்வளவு படித்தவனாக இருந்தும் ஏன் இப்படி நடந்து கொண்டேன் என்று நினைக்கும் பொழுது எனக்கே வெட்கமாக இருக்கிறது. இல்லாத நரகத்தைப் பற்றி நினைத்தேனே தவிர அதைவிட பயங்கரமான, சியாமளா அனுபவித்த நரகத்தைப் பற்றிச் சிந்திக்கவில்லை. என் கண்ணால் அந்த நரகத்தைக் கண்டேன் — இல்லை நீங்கள் காண்பித்து என் கண்ணைத் திறந்தீர்கள். இக்காலத்தில் பெண் என்றாலும், ஆண் என்றாலும் ஒன்றே. தாயும் சேயும் நன்றாக இருந்தால் போதும்.''

சியாமளா பிரபாகரனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். பிரபாகரன் சியாமளாவின் அருகில் சென்று அவள் கன்னத்தை ஆதரவாகத் தடவினான்.

''மீண்டும் அந்த நரகவேதனை அனுபவிக்க விட மாட்டேன், விடவே மாட்டேன்'' என்றான் பிரபாகரன். திருப்தியோடு நோக்கிய அவளது கண்களை அன்போடு பார்த்தது பிரபாகரனின் கண்கள்.

---

''மாட்சில் வெற்றி பெற்றவருக்குத் தலை எப்படி வலிக்கும்?''

''வின்வின் என்று!''

- பிரியா பாலு



# போஸ்ட்மேன் பொன்னுச்சாமி



எழுத்தாளர்: "கண்ணை மூடிக்கிட்டுக் கவரை என்னிடம் நீட்டறியே... ஏம்ப்பா...?"

பொன்னுச்சாமி: "திரும்பி வந்த கதையை நான் நீட்டற போதெல்லாம் உன் முகம் போற போக்கைப் பார்க்கப் பரிதாபமா இருக்கு ஸார்!"



அவர்: "என்னப்பா நடுத்தெருவில் மலைச்சுப் போய் நின்னுக்கிட்டிருக்கே...?"

பொன்னுச்சாமி: "ஒன்பதாவது மாடியிலிருக்கிற ஆபீசுக்குச் சில கடிதம் பட்டுவாடா செய்ய வேண்டியிருக்கு... பாழாய்ப் போன பவர் கட்டுனால் லிஃப்ட் வேறு வேலை செய்யலையாம்!"





பொன்னுச்சாமி: "அடடே என்ன இது! எதுக்காக இப்படி விக்கி விக்கி அழறே...?"

மனைவி: "உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு என்ன சுகத்தைக் கண்டேன்... ஒரு லெட்டர் உண்டா ஒரு மணி ஆர்டர் உண்டா...?"



அவர்: "டெலிவரிக்குப் போகும்போது கையில் எதுக்குப்பா டேப்ரிக்கார்டர்...?"

பொன்னுச்சாமி: "பட்டுவாடா செய்ய வேண்டிய வீட்டின் முன் நின்னு டேப்பை போட்டா, 'சார் போஸ்ட்டு' ன்னு என் குரல் ஒலிக்குது!"



ஒருவர்: "ஒரு ரூபாய் மணி ஆர்டரா...? யார் அனுப்பியிருக்கா...?"

பொன்னுச்சாமி: "நான் தான்! மணி ஆர்டர் இருக்கா மணி ஆர்டர் இருக்கான்னு தினம் நீங்க கேட்டு ஏமாந்து பொறுக்காம நானே என் கையிலிருந்து ஒரு ரூபா போட்டு அனுப்பினேன்!" -உ. ராஜாஜி

# இக வாழ்வில் இறையநுபவம்



## பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

உலக வாழ்க்கையில் உள்ள ஒருவன் கடவுளை அநுபவபூர்வமாக அறிய வேண்டுமானால் அவனுக்கு விவேகம், வைராக்கியம் இரண்டும் இருந்தாலே முடியும். பரமாத்மா ஒருவரே உண்மை, மற்ற எல்லாம் பொய், இரண்டு நாள் இருந்து ஓடிப்போவது என்பதில் அவனுக்கு அசைக்க முடியாத தெளிவுணர்ச்சி இருக்க வேண்டும். மேல் பரப்பிலே மிதந்து பயனில்லை. அடி ஆழத்துக்கு முழுக வேண்டும்.

ஆழ முழுகுவை மனமே, ஆழ முழுகுவை
ஆண்டவன் அழகெனும் ஆழியதனிலே
ஆழ முழுகுவை.
அடிவாரம்தனை அடைந்துவிட்டாயெனில்
ஆணி முத்தம் கை அகப்படக் காணுவை.

ஒன்றை மறக்கக் கூடாது: கடல் என்றால் அதில் முதலைகளின் ஆபத்து இருக்கத்தான் செய்யும். காமம் முதலியவற்றைத்தான் குறிப்பிடுகிறேன். மஞ்சள் பூசிக்கொண்டு நீரில் முழுகினால் முதலை முதலானவை கிட்டே வரா. அப்படி (உலக வாழ்க்கைக் கடலில்) முழுகு முன் விவேகம், வைராக்கியம் இரண்டையும் பூசிக் கொண்டே ஒருவன் அதனுள் இறங்க வேண்டும்.

இப்படிச் சிலர் உலகிலேயே (உலக வாழ்வில் இருந்து கொண்டே) பகவானை அறிந்திருக்கிறார்கள். இரண்டு விதமான யோகிகளைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. மறைவானவர்கள் வெளிப்படையானவர்கள் என்பதாக. உலகத்தைத் துறந்தவர்கள் வெளிப்படையாக யோகிகள் எனத் தெரிந்து கொள்ளப்படுகிறார்கள். மறைவான யோகிகளோ உலகிலேயே வாழ்க்கை நடத்துகிறார்கள். அவர்களை எவரும் (யோகியர் எனத்) தெரிந்துகொள்வதில்லை. பட்டணத்துக்கு வந்து வீட்டு வேலை செய்கிற ஒரு வேலைக்காரி யஜமானனின் வீட்டுக் காரியங்களையேதான் செய்து கொண்டிருந்தாலும் அவள் மனம் எப்போதும் கிராமத்தில் இருக்கிற தன் குழந்தைகளிடம்தான் இருக்கும். அப்படி, இந்த மறைவான யோகிகள் லோக காரியங்கள் யாவும் செய்தாலும் உள்ளத்தில் ஈச்வர சிந்தனை ஒன்றோடேயே இருப்பார்கள்: தன் புருஷனுக்குச் செய்ய வேண்டியதையெல்லாம் மிகவும் சரியாகச் செய்வது போல் தீவிரமாகக் காட்டிக் கொண்டே ஸதாவும் கள்ளக் காதலனை நினைத்துக் கொண்டிருக்கும் சிறுக்கி மாதிரி இருப்பார்கள்!

விவேகத்தையும் வைராக்கியத்தையும் பெறுவது மிகவும் சிரமம். தனக்குத் தானே யஜமானன் என்ற (அஹங்கார) உணர்வையும் இதெல்லாம் 'என்னுடையவை' என்ற (மமகார) உணர்வையும் விடுவது எளிதல்ல.

• நான் பார்த்திருக்கிறேன். ஐநூறு ரூபாய் சம்பாதிக்கிற ஒரு டெபுடி மாஜிஸ்திரேட். புராண பிரவசனத்தில் அவரால் கொஞ்சமும் ஈடுபட முடியவில்லை. தம் குழந்தை ஒன்றை உபந்நியாசத்துக்கு அழைத்து வந்திருந்தார். அதற்கு ஸௌகரியமாக இடம் பண்ணிக் கொடுப்பதிலேயேதான் அவருடைய கவனம் முழுக்க இருந்தது. இன்னொருத்தர் — பேரைச் சொல்லமாட்டேன் — அவர் ஏகப்பட்ட நேரம் ஜபம் பண்ணுபவர்; கடைசியில், பத்தாயிரம் ரூபாய் காசுக்காகக் கோர்ட்டிலே போய் ஸாக்ஷி சொன்னார். அதனால்தான் சொல்கிறேன், உலகத்திலேயே கடவுள் அநுபவம் பெற முடியும்தான் என்றாலும் விவேக—வைராக்யங்கள் இருந்தால் மட்டுமே இது ஸாத்தியம்.

(தமிழாக்கம்: ரா. கணபதி)

# பெண் பார்த்த போது

## விஜயாலயன்



பெண்ணின் அப்பா எங்களை ஏக மகிழ்ச்சியோடு வரவேற்றார்.

''வாங்க....வாங்க...''

நான், அம்மா, அண்ணன், அண்ணி எல்லோரும் உள்ளே நுழைந்து, சோபாவில் உட்கார்ந்தோம்.

உள் அறையிலிருந்து முப்பத்து ஐந்து வயதில் ஒரு பெண் எட்டிப் பார்த்தாள். சட்டென்று சேலைத் தலைப்பைப் போர்த்திக் கொண்டு எங்களை ஆராய்ந்தாள்.

அவள் முகத்தில் சந்தோஷம் பளிரிடத் தன் கணவரை நோக்கினாள்.

பெண்ணின் அப்பா அவருக்கு ஜாடை காட்டினார்.

சிறிது நேரத்தில் இனிப்பும் பலகாரங்களும் வந்தன.

வேண்டா வெறுப்பாகத் தின்றுக்கொண்டிருந்தேன்.

என் கண்கள் அந்த வீடு முழுவதும் அலைந்தன.

''பெண்ணைக் கூட்டிக்கிட்டு வாங்க'' அம்மாதான் சொன்னாள்.

என் மனம் மகிழ்ச்சியால் தாவிக் குதித்தது.

''விசாலாட்சி சரளாவைக் கூட்டிக்கிட்டு வா....'' பெண்ணின் அப்பா தன் மனைவியை விரட்டினார்.

சிறிது நேரத்தில் தாம்பூலத் தட்டுடன், குனிந்த தலை நிமிராமல் சரளா வந்தாள்.

இரத்தமாகச் சிவந்த நிறம். அளவான உயரம். அழகான உருவம்.

என் மனம் எண்ணெயில் போட்ட பூரியாக மகிழ்ச்சியால் உப்பிக் கொண்டிருந்தது.

இறுக்கிய ஷூவைத் தளர்த்தி விடுவதைப் போல் குனிந்து ஷூ லேசை அவிழ்த்தவாறே சரளாவைப் பார்த்தேன்.

குங்குமத்தைக் கொட்டியதைப் போல் அவள் முகம் நாணிச் சிவந்தது.

இதழ்கள் மெதுவாக விரித்துப் புன்னகையை உதிர்க்க.... உதடுகள் செல்லமாய்ப் பற்களில் கடிவுண்டது.

என் நோக்கத்தைப் புரிந்து கொண்டாள். சரியான குறும்புக்காரி. நிமிர்ந்து அம்மாவைப் பார்த்தேன்.

அம்மாவின் முகத்தில் பூரிப்பு. சந்தோஷம்.

அண்ணியைப் பார்த்தேன்.

அவள் முகத்தில் மகிழ்ச்சியின் — திருப்தியின் பரவசம்.

''ஆசீர்வாதம் வாங்கிக்கம்மா....'' என்றார் பெண்ணின் அப்பா அன்போடு.

அழகாகக் குனிந்து... அம்மாவின் கால்களைத் தொட்டு வணங்கினாள்.

நிமிர்ந்தாள் சரளா.

அவள் முகம் ஏன் இப்படி அதிர்கிறது?

யாரைப் பார்த்து இப்படி அதிர்கிறாள்?

அண்ணனைப் பார்த்தேன்.

அண்ணன் முகம் ஏன் இப்படி வெளிறுகிறது?

திரும்பவும் சரளாவைப் பார்த்தேன்.

வியர்வை அவள் முகத்தில் முத்து முத்தாகப் பிறந்து...தவித்தது.

அவசரம் அவசரமாகத் திரும்பி உள்ளே போனாள். நான் சட்டென்று அண்ணியைப் பார்த்தேன்.

அண்ணி உள்ளே விரையும் சரளாவையும், அண்ணனையும் மாறி மாறிப் பார்த்தாள். அண்ணன் விளக்கெண்ணெயைச் சாப்பிட்டவனைப் போல் உட்கார்ந்திருந்தான்.

''உங்க பெண்ணை எங்களுக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.. கல்யாணத்.....''

''அம்மா!..''லேசாக சத்தம் போட்டேன்.

அம்மா என்னைப் பார்த்தாள்.

''ஊருக்குப்போய்லெட்டர்போடுகிறோம்'' என்றேன் பெண்ணின் அப்பாவைப்பார்த்து.

அம்மா என்னை மிகவும் ஆழமாகப் பார்த்தாள். எதையும் காரணமில்லாமல் சொல்ல மாட்டேன் என்பது அம்மாவுக்குத் தெரியும். நான் விருக்கென்று எழுந்து கொண்டேன்.

● ● ●

''உங்கள் பெண் எங்களுக்குப் பிடிக்கவில்லை

மன்னிக்கவும்.''

என்று இரண்டே வரியில் எழுதிய கடிதத்தைத் தபாலில் சேர்க்கப் புறப்பட்டேன்.

அடுத்த அறையில் அண்ணன் அண்ணியின் சத்தம் கேட்டது. இதுநாள் வரை அண்ணனும் அண்ணியும் சத்தம் போட்டுப் பேசியதே கிடையாது. நின்று நிதானித்தேன்.

''உண்மையைச் சொல்லுங்க. உங்க தம்பிக்குப் பார்த்த பெண்ணுக்கும் உங்களுக்கும் என்ன தொடர்பு?'' – இது அண்ணி.

''மாலதி. நான் சொல்றதைக் கொஞ்சம்'' இது அண்ணனின் பரிதாபமான கெஞ்சல்.

''போதும் நிறுத்துங்க. எனக்கு எல்லாம் தெரியும். ஏற்கனவே அந்தப் பெண்ணுக்கும் உங்களுக்கும் தொடர்பிருக்கு. என்ன காரணத்தினாலோ அந்தப் பெண்ணுக்கும் உங்களுக்கும் கல்யாணம் ஆகலே. ஏமாந்தவள் நான்தான் கிடைச்சேன்!'' அண்ணி எரிச்சலோடும் அழுகையோடும் வார்த்தைகளைக் கொட்டினாள்.

''மாலதி! போதும் நிறுத்து. எனக்கும் அந்தப் பெண்ணுக்கும் எந்தத் தொடர்பும் கிடையாது....'' கோபத்தோடு கத்தினான் அண்ணன்.

''பின்னே! எதுக்காக அந்தப் பெண் உங்களைப் பார்த்து அதிர்ச்சி அடையணும்? நீங்களும் ஏன் அந்தப் பெண்ணைப் பார்த்தவுடன் சுட்ட அப்பளம் தண்ணியிலே போட்ட மாதிரி ஆகணும்....?'' என்று அண்ணி விம்மினாள்.

''முதல்லே... என்னை மன்னிச்சேன்னு ஒரு வார்த்தை சொல்லு மாலதி!''

அண்ணி பயத்தோடு கேட்டாள்.

''எதுக்கு....?''

''என்னை நம்பு மாலதி. உன்னைக் கல்யாணம் செய்துகிட்ட பின்னாடி என் மனசால கூட உனக்குத் துரோகம் செய்தது கிடையாது.....''

''சொல்லுங்க.''

''நமக்குக் கல்யாணமாகி மூணு மாசம் ஆச்சு. மூணு மாசத்துக்கு முன்னாலே ஆபீஸிலே என்னோடவேலைசெய்யற பெண் என்னைக் காதலிச்சா.... சரி....சரி... முறைக்காதே....நானும்தான் காதலிச்சேன். கொஞ்சம் வரம்பு மீறி நடந்துகிட்டோம். அவள் ரெண்டு மாசம் கர்ப்பமாயிட்டா. நான் அவளை எப்படியோ சமாதானப்படுத்தி டாக்டர் சரோஜினி ராமதாஸ் கிட்டக் கூட்டிக்கிட்டுப் போனேன். தம்பிக்குப் பார்த்த பெண் ஒரு நர்ஸுன்னுதான் உனக்குத் தெரியுமே? அந்தப் பெண் சரோஜினி ராம்தாஸ் கிட்டேதான் நர்ஸா இருக்கா. டாக்டர் சரோஜினி ராம்தாஸ் கருவைக் கலைக்க மறுத்தார். நான் அவரிடம் கெஞ்சினேன். டாக்டர் இந்தப் பெண் என் வருங்கால மனைவி. கல்யாணத்துக்கு முன்னாலே



கொஞ்சம் அவசரப்பட்டு விட்டோம். இது வெளியே தெரிஞ்சா மானம் போயிடும். என்னை நம்புங்க டாக்டர்.... ப்ளீஸ்... என்றேன். பிறகு அபார்ஷன் பண்ணச் சம்மதிச்சாங்க. அந்தப் பெண் சுகந்திதான் என் வருங்கால மனைவி, அப்படி இப்படின்னு சொல்லிவிட்டு, இன்னைக்கு என் மனைவியா உன்னைப் பார்த்த போது சரளா அதிர்ந்து போய் விட்டாள். அவள் இந்த விஷயத்தைச் சொல்லி விடுவாளோ என்று நானும் பயந்து போனேன்....''

அண்ணன் அண்ணியிடம் கெஞ்ச....

அண்ணி விம்மலுடன் அழுகையை அடக்க....

எதுவும் என் காதில் விழவில்லை.

உங்கள் பெண்ணை எங்களுக்குப் பிடிக்கவில்லை. —மன்னிக்கவும்.

என்று இரண்டே வரியில் எழுதப்பட்ட அந்தக் கடிதத்தை என் கைகள் சுக்கல் சுக்கலாகக் கிழித்தன.



---




படம் ஆழமான சோகத்தை அடிப்படையாகக் கொண்டது; பால் கலக்காத, சர்க்கரை சேர்க்காத, 'ஸ்ட்ராங்' 'டிகாக்ஷ'னைப் போன்றது. ஒருதலைக் காதலால் கல்லூரி மாணவன் ராஜா பைத்தியம் மாதிரி ஆகி விடுகிறான். அவன் காதலுக்கு ஆளான மாணவி சுபத்திரா கடைசிவரையில் நெகிழாமலே இருந்துவிடுகிறாள். அவள் மனத்திலும் காதல் துளிர் விடாமல் இல்லை. ஆனால் அது துளிர்விட்ட நேரம் மிக மிகத் தாமதமாகிவிட்டது.

வண்ணத்துப் பூச்சிகளாய்ப் பறந்து திரியும் மாணவிகளுக்கு இடையே குறும்பு செய்யும் மாணவர்கள்; இடையிடையே சுவையான கலாட்டாக்கள். எல்லாம் இவ் வண்ணப் படத்துக்கு எழில் கூட்டி ரசிகர்களுக்கு உற்சாகத்தையும் தருகின்றன.

ராஜா, சுபத்திராவைச் சந்தித்துப் பேச முயலும்போதெல்லாம் அவள் அவனைக் 'கட்' செய்துவிட்டுப் போவது இனம் தெரியாத இன்ப வேதனையைத் தருகிறது.

புது முகங்களே நடிக்கும் புதுமைப் படம்.

சுபத்திராவினால் ஒரு கண்ணீர் காவியமே உருவாகிவிடுகிறது. அந்தப் பாத்திரத்தில் ரூபாவின் விசாலமான நயனங்கள், உணர்ச்சிகளை அழுத்திக் கொள்ள முயலும் செவ்விதழ்கள், விரக்தியான தளர்நடை எல்லாமே அருமையாக ஒத்துழைத்திருக்கின்றன.

ராஜா, இலவு காத்த கிளி. சங்கர் ஓர் உணர்ச்சி வடிவம் அதற்குக் கொடுத்துவிட்டார்.

சுபத்ராவின் அருமைத் தோழி லாவண்யா —காதலர்களுக்கு இடையே இணைப்பு ஏற்படுத்த முயன்ற, பயன்படாத பாலம். உஷா, லாவண்யாவாக நன்றாய் நடித்திருக்கிறார்.

மாயவரம் — தரங்கம்பாடி சின்ன ரயில் வண்டித் தொடர், நட்சத்திர அந்தஸ்தைப் பெற்றுவிட்டது.

ரயிலில் சுவாரஸ்யமாகத் தொடங்கிய கதை இறுதியில், ஓடும் ரயிலிலேயே முடிவடைகிறது. சுபத்ரா, மனம் இளகி ராஜாவுக்குத் தன் இசைவைத் தெரிவிக்க ஓடோடி வந்தும், ராஜாவின் உயிர் அதைவிட வேகமாக ஓடிவிட்டதே!

ராபர்ட் ராஜசேகரின் வண்ண ஒளிப்பதிவு, படத்தின் சிறப்பு அம்சம்.

படம் பார்ப்பவர்கள் மனித உள்ளம் படைத்தவர்களாயிருந்தால் கண்ணீர் பெருகியே தீரும்.

''ஒரு தலை ராகம்'' சினிமா பார்ப்போரின் ரசிகத்தன்மைக்கு ஓர் உரைகல். —காந்தன்

# கடல்ராணி



## சாண்டில்யன்

### அத்தியாயம் 44

## தவமும் தருணிகளும்

தமது மாளிகைக் கூடத்தின் கதவிடுக்கின் மூலம் உள்ளே நடந்த விந்தையைப் பார்த்த சங்கர்பத்தும் அவரை இடித்துக் கொண்டு கண்ணை உள்ளே ஓட்டிய துலாஜி ஆங்கரேயும் இந்திரஜித் அனந்தின் நிலையைக் கண்டதும் அவனைப் பற்றி பரிதாபப்பட்டார்களென்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. பெண்களை நரகம் என்று அனந்த் சொன்னதும் ''நாங்கள் நரகமா?'' என்று கேட்டுக் கொண்டு வந்த கடல்ராணி அனந்தின் மேலங்கியின் வலது பகுதியைப் பிடித்துக் கடுமையாக அவனை ஒருபுறமாக இழுத்தாள். ''தத்துவம் அப்படித்தான் சொல்கிறது'' என்ற அனந்தின் பதிலைக் கேட்ட சாரு அவனை மிக வேகமாக நெருங்கி அவனது அங்கியின் இடது பக்கத்தைப் பிடித்து இழுத்து, ''தத்துவமா பேசுகிறீர்கள்?'' என்று கூறிப் பல்லைக் கடித்தாள். அத்துடன் ''ரத்னு! விடு இவரை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று சீறி அனந்தைப் பலமாகத் தன் பக்கம் இழுத்தாள்.

''உன்னிடந்தான் இருந்தாரே ஒரு வாரத்துக்கு மேல்'' என்று இகழ்ச்சிக் குரலில் சீறிய கடல்ராணி, ''என்னிடம் விட்டு விடு. நான் இவருக்குப் பாடம் சொல்கிறேன்'' என்று தனது பக்கத்துக்கு இழுத்தாள் இந்திரஜித்தை.

''உன்னிடம் பல வாரங்கள் இருந்திருக்கிறார். அப்பொழுது தான் பாடமும் சொல்லிக் கொடுத்தாயே, விடு என்னிடம்'' என்று கூறி மீண்டும் பலமாகச் சாரு இழுக்கவே அவள் பக்கத்திலிருந்த அவன் அங்கி சர்ரென்று கிழிந்தது.

சாருவின் சொற்களால் சீற்றமடைந்த கடல்ராணி ''நான் சொல்லிக் கொடுத்தேனு பாடம் நீ சொல்லிக் கொடுத்தாயா குடிசையில் இருந்த போது? விடு இவரை'' என்று தன் பலத்தைக் காட்டவே அவள் பக்கமிருந்த அவன் அங்கியும் சர்ரென்று கிழிந்தது...

இருபுறமும் அங்கி கிழிந்து விட்டதால் திறந்த மார்புடனும், அந்தப் பெண்களின் துடுக்குத்தனத்தால் சினமும் அடைந்த இந்திரஜித் மிரள மிரள விழித்தான். அடுத்த விநாடி அங்கியை விட்டு ஆளுக்கொருகையைப் பிடித்து இரு பெண்களும் இழுத்ததினால் அந்தப் பாவையரிடம் பட்ட இம்சையைத் தாள முடியாமல் முகத்தைச் சுளித்தான்

இந்திரஜித் அனந்த். அந்தச் சமயத்தில் தான் தளபதி பந்த் அவன் தத்துவத்தைக் கண்டித்தார்.

அவர் கண்டனத்தைக் கேட்டுக்கொண்டே உள்ளே நடந்த நாடகத்தையும் கவனித்த துலாஜி ஆங்கரே, ''ஆணென்றால் பேயும் இறங்கும் என்ற பழமொழி உண்டு'' என்று அனுதாபக் குரலில் சொற்களை உதிர்த்தான்.

இதை சங்கர்பந்தால் பொறுக்க முடியாததால் ''தமிழை நீ ஒழுங்காகப் படிக்கவில்லை'' என்று கூறினார். கோபச் சீற்றத்தைக் குரலில் காட்டினார்.

''நான் மராட்டியன். எதற்காகத் தமிழைப் படிக்க வேண்டும்?''' என்று வினவினான் துலாஜி.

''மகாராஷ்டிர சாம்ராஜ்யம் தமிழ்நாடு வரையில் பரவியிருப்பதால்!'' இதைப் பெருமையுடன் சொன்னார் பந்த்..

துலாஜி கண்ணைக் கதவிடுக்கிலிருந்து எடுக்காமலே கேட்டான் ''தமிழில் நீங்கள் புலி போலிருக்கிறது?'' என்று.

''ஆம்.''

''அப்படியானால் நான் பேசியதில் என்ன தவறு? சொல்லுங்கள்.''

''ஆணென்றால் பேயும் இறங்கும் என்றாய். அதல்ல பழமொழி.''

''வேறு எது?''

பெண்ணென்றால் பேயும் இறங்கும் என்பது பழமொழி.''

''அப்படியானால் பழமொழியே தவறு. தமிழே தவறு.''

''என்ன உளறுகிறாய்?''

''உளறுவது நானல்ல. உள்ளே பாருங்கள்.



திண்டாடுபவன் ஆண். இரு பெண்கள் அவன் சட்டையைப் பிய்த்து விட்டனர். இருபுறமும் இழுக்கின்றனர். ஆகவே பழமொழியை மாற்ற வேண்டும்.''

துலாஜியின் விளக்கத்தைக் கேட்டதும் சங்கர்பந்த் புன்முறுவல் கொண்டார். உடனே பதிலேதும் சொல்லாமல் உள்ளே கவனித்தார். ''தமிழ்ப் பழமொழி தவறு தவறு. துலாஜி! தமிழ் சீர்திருத்தம் நீதான் செய்ய வேண்டும்'' என்று உவகை துள்ளப் பேசினார்.

அந்த சமயத்தில் கூடத்துக்குள்ளே இருபுறத்திலும் அனந்தை இழுத்த இரு அழகிகளும் அவனைத் தர தர என்று இழுத்துக் கொண்டு சென்று அவனைச் சற்று எட்ட இருந்த மஞ்சத்தில் தள்ளினார்கள். பிறகு அவன் கச்சையிலிருந்த இரு துப்பாக்கிகளையும் ஆளுக்கொன்றாகக் கையில் எடுத்துக் கொண்டார்கள். அவற்றை ஏற்கனவே தங்கள் இடையிலிருந்த துப்பாக்கியுடன் ஆளுக்கொன்றாகச் சொருகிக் கொள்ளவும் செய்தார்கள்.

கூடத்துக்கு வெளியே இருந்த சங்கர்பந்த் ''நிலைமை பயங்கரமாகிறது'' என்றார்.

''ஆம்'' என்று ஒத்துப் பாடினான் துலாஜி.

அப்பொழுது அவர்கள் இருவரையும் விலக்கியது ஒரு கரம். இடைவெளியில் புகுந்தது ஒரு முகம். அதுவும் உள்ளே கதவிடுக்கின் மூலம் கண்களைச் செலுத்தியது. அந்த முகத்துக்குடையவன் ஸில்வர் என்பதை அறிந்ததும் ''நீ எங்கு வந்தாய் இங்கே?'' என்று வினவினான் துலாஜி.

வில்வர் பதில் சொல்லவில்லை சில விநாடிகள். பிறகு சொன்னான்: ''உள்ளே நிலைமை சரியாயில்லை'' என்று.

''என்ன நடக்கிறது?'' என்று வினவினார் பந்த்.

''இரு பெண்களும் அனந்தைப் பிடித்து மஞ்சத்தில் சாய்த்து விட்டார்கள். திண்டாடுகிறான் அனந்த்'' என்றான் வில்வர்.

இந்தச் சமயத்தில் துலாஜிக்கு ஒருயோசனை தோன்றியது. ''ஒன்று செய்'' என்றான் அவன் தன் யோசனையைச் சொல்லுவதற்குப் பூர்வாங்கமாக.

''என்ன?'' என்று வில்வர் கேட்டான்.

''உன் தோளில் படுத்திருக்கும் கிளியை எடுத்து உள்ளே விட்டு விடு'' என்று கூறினான் துலாஜி.

''உள்ளே இரு கிளிகள் இருக்கின்றன'' என்று நினைப்பூட்டினார் பந்த்.

''அவையும் அசுரக் கிளிகள்'' என்றான் வில்வர்.

''ஆம், ஆம். இந்தக் கிளியை அவை கொன்று விடும்'' என்றார் பந்த்.

அதே சமயத்தில் உள்ளே கடல்ராணி அனந்தின் கழுத்தைப் பிடித்துக் கொண்டிருந்தாள். சாரு அவன் கையை எடுக்க முயன்று கொண்டிருந்தாள். அந்தச் சச்சரவில் இருவருமே அனந்தின் மடியில் உட்கார்ந்து கொண்டு பரஸ்பரம் சண்டையைத் துவக்கி அவனுக்கு இணையிலா இம்சையைச் செய்து கொண்டிருந்தார்கள். சாருவின் கடுமையான கைப்பிடியால் கடல்ராணியின் கை அனந்தின் கழுத்திலிருந்து அகற்றப் படவே இருவரும் சட்டென்று அனந்தின் மடியிலிருந்து எழுந்து ஒருவரையொருவர் அச்சத்துடன் பார்த்துக் கொண்டார்கள்.

அனந்தின் இரு கண்களும் மூடிக் கிடந்தன. கைகள் துவண்டு கிடந்தன. இரு புறமும். தேகம் அசைவற்று இருந்தது.



# ஒரு ஆட்டுக்கல் அலட்டுகிறது!



ஜி. நடராஜன்.

வரட்டும், வரட்டும், பலர்கட் வரட்டும்!
நேத்திக்கு வந்த 'மிக்ஸி'யின் மயக்கத்தில்
என்னை 'டைவோர்ஸ்' செய்துவிட்டு
ஒதுக்கி வைத்திருக்கிறீர்கள், மூலையில்!
ஜோக் எழுத்தாளர்கள் மட்டும்—
என்னை உருட்டிப் புரட்டி
இன்னும் சம்பாதிக்கிறீர்கள்!
வரட்டும், வரட்டும், பலர்கட்
வரட்டும் - என் அருமை
அப்போது தான் தெரியும்!

---

மூச்சு மட்டும் ஒரே சீராக வருவதை மார்பின் எழுச்சியும் தாழ்வும் நிரூபித்தன.

''இவர் மயக்கமடைந்து விட்டார்'' என்றாள் கடல்ராணி.

''உன்னைப் பார்த்தா?'' சாருவின் அனுதாபக் கேள்வியில் இகழ்ச்சியும் கலந்து கிடந்தது.

''இல்லை. உன் முகத்தைப் பார்த்துத்தான்'' என்றாள் கடல்ராணி.

அதற்கு மேலும் தாமதிப்பது உசிதமல்லவென்று நினைத்த சங்கர்பந்த் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார் துலாஜியுடன். ''அனந்த்! அனந்த்!'' என்று இருமுறை அழைக்கவும் செய்தார்.

மூடிய கண்களைத் திறக்கவில்லை அனந்த். ''ஹர ஹர மஹாதேவ்'' என்ற சொற்கள் மட்டும் அவன் இதழ்களிலிருந்து உதிர்ந்தன.

''பார்த்தாயா அவன் வீரத்தை?'' என்று கேட்டார் பந்த் துலாஜியை நோக்கி.

''பிறவி வீரன்'' என்று பாராட்டினான் துலாஜி.

''இதில் வீரம் எங்கேயிருந்து வருகிறது?'' என்று கேட்டுக் கொண்டே வில்வர் உள்ளே நுழைந்தான்.

சங்கர்பந்த் வில்வரை மிக்க இகழ்ச்சியுடன் பார்த்தார். அதே இகழ்ச்சியுடன் அவன்மீது கண்களை ஓட்டிய துலாஜி ''வில்வர்! அனந்தின் உதடுகளிலிருந்து உதிர்ந்த சொற்களைக் கேட்டாயா?'' என்று வினவினான்.

''இல்லை'' என்று வில்வர் பதில் சொல்வதற்கும் ''ஹர ஹர மஹாதேவ்'' என்று இரண்டாம் முறை அனந்தின் உதடுகளிலிருந்து சொற்கள் உதிருவதற்கும் சமயம் சரியாயிருக்கவே, ''இப்பொழுது என்ன சொல்கிறாய்?'' என்று துலாஜி பெருமையுடன் கேட்டான் வில்வரை.

''சொல்ல என்ன இருக்கிறது''? என்று வில்வர் வினவினான் ஏதும் புரியாமல்.

''நீ வெள்ளைக்காரன்'' என்றான் துலாஜி.

''அதனாலென்ன?'' என்றான் வில்வர்.

''ஹர ஹர மஹா தேவின் பொருள் உனக்குப் புரிய நியாயமில்லை.''

''என்ன பொருளோ?''

''மஹாராஷ்டிர வீரர்கள் போருக்குள் புகும் போது வாளைத் தூக்கி ஹர ஹர மஹாதேவ் என்று வீர கோஷம் செய்து கொண்டு தான் புரவிகளுடன் எதிரிகள் மீது பாய்வார்கள். இது சிவாஜி மஹாராஜா மஹாராஷ்டிரர்களுக்கு அளித்த தாரக மந்திரம்'' என்று துலாஜி விளக்கினான்.

''இங்கு என்ன போர் நடக்கிறது? புரவிகள் எங்கே?'' என்றான் வில்வர் இகழ்ச்சியுடன்.

துலாஜி பதில் சொல்லவில்லை. அனந்துக்கு எதிராக நின்றிருந்த இரு பெண்கள் மீதும் கண்களை ஓட்டினான். அதைக் கண்ட வில்வர் பலமாக நகைத்தான். சங்கர்பந்தும் நகைத்தார்: அந்தச் சிரிப்பொலியால் கண்களை அகல விரித்த இந்திரஜித் அனந்த் ''இங்கென்ன வேடிக்கை பார்க்கவா வந்தீர்கள்?'' என்று எதிரே நின்ற பந்த், துலாஜி, வில்வர் மூவரையும் பார்த்து எரிந்து விழுந்து கொண்டே எழுந்திருந்தான் மஞ்சத்திலிருந்து.

அவன் எழுந்த வேகத்தைக் கண்ட வில்வர் ''அனந்த்! வென் வீ கேம் யூ வர் இன் மெடிடேஷன் (நாங்கள் வந்தபோது நீ தியானத்திலிருந்தாய்)'' என்று கூறினான்.

''வாட் டூ யூ மீன் (என்ன சொல்கிறாய் நீ?)'' என்றான் அனந்த் கடுமை தளராத குரலில்.

''உன் கண்கள் மூடியிருந்தன'' என்றான் துலாஜி.

''அதனால் தியானத்திலிருப்பதாக வில்வர் நினைத்தான்'' என்றார் பந்த்.

''ஏன், தவம் செய்வதாக நினைக்கிறது தானே?'' என்று மீண்டும் சீறினான் அனந்த்.

''அப்படியும் வைத்துக் கொள்ளலாம்'' என்றார் பந்த்.

''எப்படியும் வைத்துக் கொள்ளலாம்?''

''தவமாக.''

''வைத்துக் கொள்வதுதானே?''

''விசுவாமித்திரர் தவமாக வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஒரு வித்தியாசமிருக்கிறது.''

''என்ன வித்தியாசம்?''

''விசுவாமித்திரர் தவத்தைக் கெடுக்க முதலில் மேனகை, அடுத்து ரம்பை, இப்படி ஒவ்வொருவராகத்தான் வந்தார்கள். இங்கு ஒரே சமயத்தில் மேனகை ரம்பை இருவரும் வந்திருக்கிறார்கள்.'' இதைச் சொன்ன சங்கர்பந்த் தாம் ஏதோ பெரிய இதிகாச உண்மையைச் சொல்லி விட்டதாகப் பெருமிதத்தை முகத்தில் காட்டினார்.



டைரக்டர்:- கதையில் நிறைய இடங்களில் பொடி வைக்க எழுதியிருக்கீங்களே.
வசனகர்த்தா:- எப்படி சொல்றீங்க?
டைரக்டர்:- படிக்கும் போதே தும்மல் வருதே.
ஆர். கோபாலகிருஷ்ணன்

இந்திரஜீத் அனந்த் இளநகை கொண்டான். ''விசுவாமித்திர பங்கத்தில் நாடகைக்கும் பங்கு உண்டு'' என்றான்.

இதைக் கேட்டதும் வெகுண்ட இரு பெண்களும் அனந்தின் மீது அக்னி விழிகளைப் பதிய விட்டார்கள். அவற்றைக் கண்ட அனந்த் ''ஒரு வித்தியாசமிருக்கிறது'' என்றான்.

''என்ன வித்தியாசம்?'' என்று கேட்டாள் ராணி.

''விளக்குங்கள்'' என்றாள் சாரு.

''விசுவாமித்திரருக்குச் சட்டை இடையாது இப்படிக் கிழித்துத் தள்ள'' என்று பதில் சொன்ன இந்திரஜீத், அப் பெண்கள் தன்னை மஞ்சத்திற்கு இழுத்துச் சென்ற போது கீழே விழுந்து விட்ட துணி மூட்டையைக் காட்டி ''சாரு! உன் மூட்டையை எடுத்துக் கொண்டு உள்ளே போ. ராணி! நீயும் உள்ளே செல்'' என்று அதிகாரக் குரலில் சொன்னான். பிறகு சங்கர் பந்த், துலாஜி, ஸில்வர் மூவரையும் நோக்கி ''தளபதி! உங்கள் அறைக்குச் செல்லுங்கள். நான் துலாஜியுடன் சென்று விட்டுக் காலையில் வருகிறேன்'' என்று சொல்லி திரும்ப முயன்றான். அந்தச் சமயத்தில் தன் இடையிலிருந்த அவனது கைத்துப்பாக்கியை எடுத்து அவன் இடையில் சொருகினாள் ராணி. சாருவும் அவளைப் பின்பற்றி தன்னிடமிருந்த அவனது இன்னொரு கைத்துப்பாக்கியை எடுத்து அவனிடையில் சொருகினாள்.

''நன்றி'' என்று அவ்விரு பெண்களையும் நோக்கிக் கூறிவிட்டு ''வா துலாஜி'' என்று துலாஜியை அழைத்துக் கொண்டு வெளியே சென்றான் அனந்த். இரு பெண்களும் உள்ளே செல்ல சங்கர் பந்த் மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டார்.

அவர் எதிரே சாருவின் துணிமூட்டை நடுக்கூடத்தில் கிடந்தது. அதன் பக்கத்தில் தனது அகரக்கிளியுடன் நின்றிருந்த ஸில்வர் பந்துக்குத் தலை வணங்கி வெளியே சென்றான். அவன் முகத்தில் தீவிர சிந்தனை படர்ந்து கிடந்தது. அந்தச் சிந்தனையுடன் நேராக சிவாஜி சிலைக்கருகில் சென்று உட்கார்ந்து கொண்டான் கிளியுடன்.

அந்த இரு பெண்களையும் அழைத்துக் கொண்டு அனந்த் வந்தபோதும் அங்குதான் உட்கார்ந்திருந்தான் அவன். நடந்த வேடிக்கைகளையும் பார்த்துக் கொண்டுதானிருந்தான். சங்கர்பந்தும் துலாஜியும் சென்று தனபதி மாளிகையில் நுழைந்த போதும் அங்குதானிருந்தான். அவன் கூரிய அறிவில் ஏதேதோ எண்ணங்கள் புரண்டன. பிறகு என்ன நடக்கிறதென்பதை அறிய அவனும் மாளிகையை நோக்கிச் சென்றான். அங்கு நடந்த வேடிக்கைகளில் அவனும் பங்கு கொண்டு திரும்பியதும் அவன் சிந்தனை அதிகத் தீவிரத்தில் இறங்கியது. ''இதற்கு என்ன காரணம்? ப்ளிண்ட் கான் யூ டெல் மீ த ரீஸன் பார் திஸ் ட்ராமா (ப்ளிண்ட்! இந்த நாடகத்துக்கு என்ன காரணம் சொல்ல முடியுமா?)'' என்று தனது அகரக் கிளியைக் கேட்டான். காப்டன் ப்ளிண்ட் தனது பெரிய விழிகளால் ஸில்வரை நோக்கியது. ஸில்வரின் கண்கள் கிளியின் கண்களுடன் கலந்தன பல விநாடிகள். பிறகு சொன்னான் கிளிக்கு, ''யூ ஆர் ரைட் ப்ளிண்ட் இட் ஈஸ் நாட் ஆஸ் ஸிம்பிள் ஆஸ் இட் லுக்ஸ் (நீ சொல்வது சரி ப்ளிண்ட்! வெளிக்குத் தெரிவதைப் போல் இந்த நாடகம் அத்தனை சாதாரணமானதல்ல)'' என்று. இதைச் சற்று இரைந்தே சொன்னான் ஸில்வர்.

''ஏது?'' டெய்லரின் தடித்த குரல் ஸில்வரைத் திடுக்கிடச் செய்தது.

அனந்தும் இரு பெண்களும் படகில் வந்ததை காலண்ட்ராவிலிருந்து கவனித்த டெய்லரும் இங்கலண்டும் படகொன்றில் அங்கு வந்து சேர்ந்தனர். கோட்டைக்குள் நுழைந்ததும் ஸில்வர் தனது கிளியுடன் ஏதோ பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனெதிரில் நின்றனர். அவன் இரைந்து கேள்வியைக் கேட்டதும் டெய்லரும் தனது கேள்வியை வீசினான்.

டெய்லரையும் இங்கலண்டையும் கவனித்த ஸில்வர் அவர்களைத் தலைக்கு அருகில் உட்காரப் பணித்தான். அவர்கள் உட்கார்ந்ததும் நடந்ததையெல்லாம் சொன்னான். கதையைக் கேட்ட டெய்லர் நகைத்தான் பெரிதாக. ''இரு பெண்களிடை ஒருவன் அகப்பட்டால் கதி இதுதான்'' என்றும் கூறினான் நகைப்பின் ஊடே.

ஆனால் இங்கலண்டின் முகத்தில் சிந்தனையும் கவலையும் படர்ந்து கிடந்தது. ''வீ வில் ஹாவ் டு வாட்ச் தெம்'' என்றான் இங்கலண்ட். ''ஐ திங் ஸில்வர் இஸ் ரைட்'' என்றும் சொன்னான்.

பிறகு இருவரும் அனந்தையும் பெண்களையும் மட்டுமின்றி துலாஜியையும் சங்கர்பந்தையும் கூடக் கவனிக்கும்படி ஸில்வரிடம் கூறிவிட்டு மீண்டும் காலண்ட்ராவுக்குச் சென்றார்கள். ஆனால் மறுநாள் காலையில் அவர்கள் கண்ட காட்சி அவர்களைப் பெரும் குழப்பத்தில் ஆழ்த்தியது. ''ஐ டோல்ட் யூ ஸில்வர் ஈஸ் ஜஸ்ட் எ பூல்'' என்று கூறினான் டெய்லர். சாட்சிக்குக் கடலையும் காட்டினான்.

(தொடரும்)

70:30 பாலியெஸ்டர்-வுல் சேர்க்கை கொண்ட
வொர்ஸ்டட் ஸூட்டிங் புதிது அல்ல. ஆயினும் இதே சேர்க்கையில்
புதிய வொர்ஸ்டட் ஸூட்டிங் ஒன்றை நாங்கள்
ஏன் தயாரித்தோம் என்பதை அறிய விரும்ப மாட்டீர்களா?



© is the registered trademark of Reliance Textile Industries Ltd.

# விமல் அறிமுகப்படுத்தும்

# பாலிவுல்

## சாதாரண சேர்க்கையிலிருந்து அசாதாரண வொர்ஸ்டட் சூட்டிங்

### இழை இந்தியாவின் அதிநவீனமான 'ஸ்பின்னிங்' ஆலையிலிருந்து

ரிலையன்ஸ் டெக்ஸ்டைல்சாரின் ரூ. 18.5 கோடி முதலீட்டில்
ஆரம்பிக்கப்பட்டிருக்கும் 'ஸ்பின்னிங்' ஆலையில் தயாரிக்கப்படும் இழை
பல சிறப்புகளைக் கொண் து.

'ஆப்டிகல் எலக்டிரானிக் கிளியரிங் டிவைஸ்'

எனப்படும் விஞ்ஞான ரீதியான முறை நம்நாட்டில் முதல் தடவையாக
உபயோகப் படுத்தப்படுகிறது. இழையின் தரத்தைக் கூட்டுகிறது.
சகல வசதிகளும் கொண்ட எமது ஆராய்ச்சிக் கூடத்தில் தயாரிப்பின்
ஒவ்வொரு கட்டத்திலும் இழை தரப் பரீட்சைக்கு உட்படுத்தப் படுகிறது.
இதனால் விமல் இழை அனைத்துலகத்திலும் தயாரிக்கப்படும் தரமான
இழைகளுக்கு நிகராக விளங்குகிறது.

### பாலிவுல் சூட்டிங். இந்தியாவின் அதிநவீனமான நெசவாலையிலிருந்து

பாலிவுல் தயாரிப்பில் உபயோகப்படுத்தப்படும் இழை உலகத்தரம் பெற்றது.
இந்த இழையிலிருந்து, இந்தியாவின் அதிநவீனமான நெசவாலையில்,
பாலிவுல் தயாரிக்கப் படுகிறது.




# நிகரற்ற விமல்

சர்வதேசத் தரம் கொண்டது

Mudra/RTI/10 TA

# அம்மா

ஜெயரதன்



கல்லுரலை நன்றாகக் கழுவி விட்டுப்புடவைத் தலைப்பில் கைகளைத் துடைத்துக் கொண்டு எழுந்திருந்தாள் அன்னம்மா. வெகு நேரம் உட்கார்ந்து அரைத்ததில் முழங்காலும் இடுப்பும் தாங்க முடியாமல் வலித்தன.

''கிருஷ்ணா... என்னப்பனே'' என்று முணுமுணுத்துக் கொண்டே குத்துவிளக்கை ஏற்றினாள்.

'எனக்கொரு பிள்ளையைக் கொடுத்தியே, நேராக் குடுக்கப்படாதா. இன்னொருத்தர் கையை எதிர்பார்க்காமெ, என் பிள்ளையோட நான் இருக்கக் கருணை காட்டப்படாதா?

கண்ணீர் கண்களை மறைக்கக் காரியங்களைக் கவனிக்கலானாள் அன்னம்மா.

வாசல் கதவு படபடவென்று தட்டப்படும் ஓசை கேட்கவும், அடுப்பைத் தணித்து விட்டு வாசல் கதவைத் திறந்தாள்.

இடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தான் ராஜப்பன்.

ஒரு நிமிடம் ஒன்றும் புரியாமல் திகைத்தவள், ராஜப்பனைப் பார்த்ததும் துடித்துப் போனாள்.

பத்து நாள் தாடியில் முகமே அடையாளம் தெரியவில்லை. பிடரிவரை தலைமயிர் வழிந்தது. அறைகிற மாதிரி ஒரு கலர்ச் சட்டையும் இடுப்பில் கைலியும் சிகரெட்டோ பீடியும் கருட்டுமாய் அகப்பட்டதைக் குடித்துக் குடித்து உதடுகள் கருத்து, கண்கள் சிவந்து... 'மகாலிங்க கவ...பாடுகள் பிள்ளை



யா ா ?'' என்று கேட்டபடியே அடி வயிறு குலுங்க அழுதாள் அன்னம்மா.

''என்டா?... பதினைந்து நாளா எங்கேடா போயிருந்தே? பெத்தவ ஒருத்தி இருக்காளேன்னு நெனைப்பே இல்லியா?''

தோள்களைப் பிடித்து உலுக்கினாள்.

''அம்மா! ... நான் ஒண்ணுமே பண்ணலேம்மா. புளியந்தோப்புப் பாலத்துக்கிட்டே பொழுது போகாமே வந்துண்டிருந்தேன். நாலஞ்சு குப்பத்துப் பசங்க சீட்டாடிண்டு இருந்தாங்க. வேடிக்கை பாக்கலாமேன்னு போனேன். திடும்னு போலீஸ் லாரி வந்து லாரிலே போட்டுண்டு போயிட்டாங்கம்மா. ஜெயிலிலே லாக்கப்லே வச்சு அடி நிமித்திப்பிட்டான்மா.... பாரும்மா...'' என்று தொடையைக் காண்பித்தான்.

கால் கையெல்லாம் வரி வரியாய் அடி பட்ட தழும்புகள்.

இந்தப் பிள்ளையை எவ்வளவு செல்லமா வளர்த்தேன்! நின்ன நிலையிலே திடுமென்று அவர் மார்பு வலியால் சுருண்டு போனபோது வயிற்றில் ஆறு மாதம் இவன் முட்டி மோதிய போது — எத்த நம்பிக்கையில் வாழ்ந்தேன். இந்தப் பிள்ளையை வளர்த்து ஆளாக்கி அவன் நிழலில் ஒதுங்கலாம் என்று எத்தனை நம்பிக்கைகளை வளர்த்தேன்?

மனம் துடித்துப் போயிற்று.

''அம்மா.. சாப்பிட்டு மூணு நாளாறது அம்மா. சாதம் போடும்மா...'' என்று இருபத்தைந்து வயதுப் பிள்ளை இரண்டு வயதுக் குழந்தை மாதிரிக் கேட்ட போது மனம் பாகாய் உருகிப் போயிற்று.

பரபரவென்று அள்ளி அள்ளிச் சாப்பிடுகிற தன் பிள்ளையைக்கண்களைக்கண்ணீர் மறைக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

பிறந்த வீட்டிலும் ஆதரவு இல்லாமல், புருஷன் விட்ட ஆஸ்தியும் இல்லாமல் கையில் குழந்தையுடன் அவள் எத்தனை சிரமப்பட்டிருக்கிறாள்? சின்ன வயது வேறு. எத்தனை கழுகுக் கண்களைச் சமாளித்திருக்கிறாள்? தன் வீட்டுச் சமையலறையே தாண்டாதவள், எத்தனை வீட்டு சமையலறைகளில் விறகோடு, விறகாய்த் தேய்ந்திருக்கிறாள்?

''இதோ பாரு அன்னம்மா! இப்படிக் கொழந்தையையும் எடுத்துண்டு வரதாயிருந்தா நீ இனிமே வர வேண்டாம்! வேறெ யாரையாவது ஏற்பாடு பண்ணிக்கறேன். 'கொழந்தை அழறது.. கொழந்தை அழற துன்னு தூக்கித் தூக்கி வைச்சுண்டா காரியம் எப்படிமா ஆகும்?'' என்று எஜமானி அம்மாக்கள் கத்துகிற போது ''என் கொழந்தைதான் எனக்கு முக்கியம். நீங்க வேறெ ஆள் வச்சுக் கோங்கோ'' என்று கூலி கூட வாங்கிக் கொள்ளாமல், ஒரு டம்ளர் பச்சைத் தண்ணீரைக் குடித்துவிட்டுக் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு வந்திருக்கிறாளே!

இப்படி எத்தனை நாட்கள்!

இதையெல்லாம் எதற்கு அனுபவித்தாள்?

இப்படிப் போலீஸ்காரர்களிடம் இவன் அடி வாங்கித் துடிக்கவா?

அடிவயிறு கொதித்தது.

''என்டாப்பா, ரொம்ப வலிக்கிறதா? வெந்நீர் ஒத்தடம் கொடுக்கட்டுமா?''

குரல் நெகிழக் கேட்டாள். 'இப்படியா அடிப்பார்கள்? பாவிகள்'

வயிறு நிறைந்ததற்கு அடையாளமாய்ப் பெரிய ஏப்பத்தை விட்டுக் கொண்டே, கையைக் கழுவிக் கொண்டு வந்து உட்கார்ந்தான். முகத்தில் தெளிவு தெரிந்தது.

''நீ ஒண்ணையும் பத்திக் கவலைப்படாதே. என்னை அடிச்சவன்களை யெல்லாம் அடையாளம் போட்டு வச்சிண்டிருக்கேன். பெரட்டி எடுக்கல்லே என் பேரு ராஜப்பன் இல்லே...''

கண்கள் ரத்தம் மாதிரிச் சிவக்க; அடித் தொண்டையில் கத்தினான்.

''சரி. வத்திப்பெட்டி இருக்கா?''

வாயில் பீடியைக் கடித்துக் கொண்டே கேட்ட பிள்ளையைப் பார்த்ததும் அனுதாபம் போய்க் கோபம் வந்தது அன்னம்மாவுக்கு.

''வீட்டுக்குள்ளே பீடி பிடிக்காதேடா, கடங்காரா! சாமி படம் எல்லாம் இருக்கு.''

''சாமி படத்துக்குப் பிரேம் போடறானே, அவன் பீடிதான் பிடிக்கிறான், தெரியுமா, ஒனக்கு?'' என்று சொல்லிச் சிரித்தவண்ணம் எரிகிற அடுப்பிலிருந்து கொள்ளிக் கட்டையை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டே படுத்துக் கொண்டான் ராஜப்பா.

தானும் சாப்பிட்டு விட்டுப் படுத்துக் கொண்டாள் அன்னம்மா.

பழைய நினைவுகள் அலை அலையாய் வந்தன.

வீட்டுக்குள் நடக்க ஆரம்பித்த குழந்தை தெருவில் ஓடி விளையாட ஆரம்பித்தான். சந்தோஷப்பட்டாள் அன்னம்மா. சந்தோஷங்களோடு வேதனைகளும் வர ஆரம்பித்தன.

அக்கம்பக்கத்துக் குழந்தைகளை அடித்து விட்டான் என்ற குற்றச்சாட்டுக்கள், சின்ன விளையாட்டுச் சாமான்களைத் திருடி எடுத்து விட்டான் என்ற முறையீடுகள்.

''பாபுவோட யானை — பொம்மையைத் திருடினியா?''



அவன்:- ஏதுடா இவ்வளவு மூடி இல்லாத பேனாக்கள்.

இவன்: வேறு எங்கே கிடைக்கும். எல்லாம் போஸ்டாபீஸ்களில் கிடைச்சது தான்.

-ஆர். கோபாலகிருஷ்ணன்

''இல்லேம்மா ... அவன்தான் வச்சுக் கோன்னு குடுத்தான்.''

விழிகளை விரித்து, முகத்தில் அப்பாவித் தனம் வழியச் சொல்கிற போது, மனம் நெகிழ்ந்து போய் விடும்.

''உங்க குழந்தையை முதலில் கண்டிச்சு வையுங்கோ. இந்தா வச்சுக்கோன்னு குடுத்துட்டு அப்புறம் திருடினான்னு சொன்னா என்ன அர்த்தம்?''

சிறுகச் சிறுக அன்றாடம் எத்தனை சண்டைகள், மனஸ்தாபங்கள்! பள்ளிக்கூடம் போனால் சரியாகி விடும் என்று, பீஸ் கட்டுகிற பள்ளிக்கூடத்தில் சேர்த்தாள் அன்னம்மா.

எழுத்துக்களைக் கற்றுக் கொள்கிற வேகத்தைவிட, அதிக வேகத்தில் கெட்ட வழக்கங்களையும் வார்த்தைகளையும் கற்றுக் கொண்டான்.

ஒருநாள் அவன் கால் சட்டையைத் தோய்க்கப் போன போது, பையில் ஒரு பீடித் துண்டு இருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனாள் அன்னம்மா.

அஞ்சறைப் பெட்டியைக் குடைந்து கொண்டிருந்த பிள்ளையைப் பரபரப்புடன் கேட்டாள், ''என்னடாது ஒன் பையிலே பீடி கெடக்கு?''

அம்மாவின் முகத்தை ஒரு நிமிஷம் பார்த்தவன், சமாளித்துக் கொண்டான். 'பக்கத்து வீட்டுக் கருப்பையா வேலை. ஸ்கூலிலே நோட்டுப்புஸ்தகத்தைக் கொஞ்சம் காட்டுடான்னான். 'போடா அது தப்புடா'ன்னேன். இருஇரு. உன்னை உங்கம்மாகிட்ட அடிவாங்க வைக்கிறேன்னான்! பழைய பீடியை எடுத்துப் பையிலே போட்டிருக்கான் போல இருக்கு. இருக்கட்டும் ராஸ்கல்! கஸ்மாலம்! ஸ்கூலுக்குப் போய் அவன் முதுகுத் தோலை உரிக்காட்டா என் பேர் ராஜப்பன் இல்லை.''

''துஷ்ட சகவாசம் வேண்டாண்டாப்பா. வாத்தியார் கிட்டச் சொல்லி வேறே எடம் மாத்திக்கோ. போக்கிரிப் பசங்க. படிக்க வர இடத்துலே பீடியைக் கொண்டு வந்துண்டு....'' என்று சொல்லிக் கொண்டே, தோய்க்கப் போனாள்.

அஞ்சறைப் பெட்டியிலிருந்து அகப்பட்டதை எடுத்துக் கொண்டு ஓடினான்.

வீட்டில் அவ்வப்போது சில்லறைகள் குறையத் தொடங்கியதைக் கவனித்தாள் அன்னம்மா. பீடித் துண்டுகள் போய், புத்தகப் பையில் சிகரெட் பாக்கெட்டைப் பார்த்த போது, அடிவயிறு குபீரென்றது.

''ஒரே பிள்ளை; வளர்ந்து நேராகி, வயதுக் காலத்தில் நிழல் தருவான்' என்று எதிர் பார்த்தால் வளர்கிற விதம் சரியாயில்லையே? தவறு செய்து விட்டாளோ அவள்?

ஒருநாள் விசாரித்துக் கொண்டு அவன் வகுப்பு ஆசிரியரைக் கண்டு, பிள்ளையைப் பற்றி விவரம் கேட்டாள்.

ஏற இறங்கப் பார்த்தார் ஆசிரியர்.

'': அவனைப் பள்ளிக்கூடத்தை விட்டு அனுப்பிச்சு ரெண்டு மாசம் ஆறதே? ஒழுங்கா, வரதேயில்லே. அப்படியே வந்தாலும் மத்த பசங்களைக் கெடுத்து விடுவான்.... பீஸ் ஒழுங்காகக் கட்டலே. பரீட்சை எழுதல்லே. . ப்ராக்ரஸ் ரிப்போர்ட்லே கையெழுத்துப் போடுறீங்களே, அப்போ கவனிக்கிறதில்லையா?''

''ப்ராகிரஸ்ரிப்போர்ட்டா? அப்படீன்னா?'' என்று பதைபதைப்புடன் கேட்டாள்.

ஆசிரியர் விளக்கம் சொல்லச் சொல்ல, வயிறு பற்றி எரிந்தது.

அம்மாவுக்குக் கையெழுத்துப் போடத் தெரியாது என்று அவனே தன் விரல் ரேகையைப் பதித்து விட்டிருக்கிறானா?

மனம் ஒடிந்து போய் வீட்டுக்கு வந்து வெகு நேரம் அழுதாள். தெய்வத்திடம் முறையிட்டாள். இந்தக் குழந்தையைக் கருவாய்த் தன் வயிற்றில் படரவிட்ட கணவனை அழைத்துக் கேவினாள்.

அன்றைக்குச் சாயங்காலம் ஏதோ அபத்தப் பாட்டை ஆபாசமாய்ச் சீட்டியடித்துக் கொண்டே வீட்டுக்குள் நுழைந்த பிள்ளையைப் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டாள்.



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள் !** **மணமானவர்கள் !!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி,**
**தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ,**
**இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்'**
**ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

# 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

- **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
- **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள்:**

சென்னை-600002, 1 முதல் 8ந் தேதி வரை: ராமச்சந்திரா லாட்ஜ், போன்: 846526. 6 அத்திப்பட்டன் தெரு, அண்ணாசாலை சமீபம். P ORR. & Sons – பெட்ரோல் பங்க் மேற்புறம் ரோடு. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: , 11, 16, 17 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி: அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25763, காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி. போன்: 33330.

பொள்ளாச்சி 14ந் தேதி: மாடர்ன் லாட்ஜ், தாலுகா ஆபீஸ் எதிர் சந்து. காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர் 14ந் தேதி: ராமகிருஷ்ணா லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணிவரை.

ஈரோடு 15ந் தேதி: ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை 21, 22 தேதி: மணீஸ் கேப். (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை மணி முதல் இரவு 7 மணி வரை.

காரைக்குடி 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி. வி. ரோடு, காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24ந் தேதி: நெல்லை லாட்ஜ், காலை 7 மணி முதல் இரவு 8 வரை.

மதுரை 26ந் தேதி: மணீஸ் கேப், டவுன் ஹால் ரோடு, போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

திண்டுக்கல் 26ந் தேதி: ஆரியபவன் லாட்ஜ் பழனி ரோடு. மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை.

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள்:**

விழுப்புரம் 3ந் தேதி: வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு. காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி: ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 மணி முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம் 4ந் தேதி: ஜெயராம் லாட்ஜ், (மேல வீதி) காலை 7 மணி முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம் 5ந் தேதி: தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர் 6ந் தேதி: அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கம்பம் 21ந் தேதி: யூனிவர்சல் லாட்ஜ், காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

தேனி 21ந் தேதி: பாண்டியன் லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

விருதுநகர் 23ந் தேதி: ஹோட்டல் ஆர்ச நேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம் 23ந் தேதி: அசோகா லாட்ஜ். மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில் 24ந் தேதி: உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி 25ந் தேதி: பார்வதி லாட்ஜ். காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கோவில்பட்டி: 25ந் தேதி சரஸ்வதி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

**தலைமை அலுவலகம்:**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**
*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*
**காந்தி ஸ்டேடியம் – சேலம்-636007**

# Dr. சாமிகிரி சித்தர்

## காது கேளாதவர்களைக் காது கேட்கச் செய்கிறார்



**காது கேளாதவர்களே! வாருங்கள்...**

★ உங்கள் நலனில் அக்கறை கொண்டோருடன் வாருங்கள். 3 நாள் — 6 வேளை சித்த வைத்திய சிகிச்சை பெறுங்கள்.

★ சந்தேகமில்லாத சந்தோஷத்தோடு காது கேட்டுச் செல்லுங்கள்.

★ காதுக் கருவி உபயோகித்தவர்களுக்கும், ஊமைத் தன்மை உள்ளவர்களுக்கும் சிகிச்சை அளிப்பதில்லை.

★ அறுவைச் சிகிச்சை செய்தும் குணமாகாதவர்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும்.

★ இயற்கை சிகிச்சை இது. என்றும் பலன் அளிக்கும்.

காதுகளை பரிசோதித்த பிறகே சிகிச்சைக்கு ஏற்கப்படுவர். (ஞாயிற்றுக்கிழமை விடுமுறை)

விவரங்களுக்கு :

**Dr. சாமிகிரி சித்தர் காதொலி நிலையம்**

**97, சரோஜினி ரோடு, ராம் நகர், கோயமுத்தூர்-641009**


**வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்**
**மயில்குயில் ஆச்சுதடி! – அக்கச்சி**
**மயில்குயில் ஆச்சுதடி!**

**துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்**
**வள்ளலைக் கண்டேனடி! – அக்கச்சி**
**வள்ளலைக் கண்டேனடி!**

– திருஅருட்பா

---


**விளம்பர உதவி :**

**SPI SAKTHI TEXTILES LIMITED**
P. O. Box No. 36, POLLACHI
TEXMARK : **3642**

| | | |
|---|---|---|
| Total Ring Spindles installed | : | 25,032 |
| Total Ring Spindles at Work | : | 25,032 |
| Total Doubling Spindles at work | : | 3,208 |

MANUFACTURING YARN IN COUNTS

| | | |
|---|---|---|
| Combed Yarn in Hanks | : | 60s, 80s & 100s |
| Doubled Yarn in Hanks | : | 2/80s, 2/60s, & 2/100s |
| Cone Yarn in Counts | : | 34s, 60s, 80s, & 100s |

**SAKTHI YARN POSSESSES ALL UNIQUE QUALITIES**

முதலில் மறுத்துப் பார்த்தான். ஆதாரங்களுடன் அம்மா அடுக்கடுக்காய் விவரம் சொல்லவும், விளக்கம் கேட்கவும் விருட்டென்று விறைத்துக் கொண்டான். 'அப்படித்தான் உன்னால் ஆனதைப் பார்' என்றான். பள்ளிக்கூடத்துக்குப் போக முடியாது என்று சத்தியம் செய்தான். இப்பொழுதே தன்னால் சம்பாதிக்க முடியும் என்று சவால் விட்டான். படித்துவிட்டு, வேலையில்லாமல் திரிகிறவர்களையெல்லாம் அடையாளம் காட்டினான். ரிக்ஷா ஓட்டினாலே அம்மாவையும் இன்னொரு குடும்பத்தையும் காப்பாற்றுகிற அளவுக்குச் சம்பாதிக்க முடியும் என்றான்.

முதலில் அரற்றினாள் அன்னம்மா. பின்னர் சமாதானமாய்ச் சொல்லிப் பார்த்தாள். அப்புறம் கெஞ்சி அழுதாள்.

''நல்ல புள்ளையா, யோக்யனா வந்து பேரும் புகழும் எடுப்பேன்னு பார்த்தேனேடா, இப்படி பிஞ்சிலேயே பழுக்கிறியேடா.''

அன்னம்மாவின் குரல் உடைந்தது.

நாளாக நாளாக ராஜப்பன் விளையாட்டுக்கள் எல்லை மீறிப் போயின.

சீட்டு விளையாடினான் என்று போலீஸ் பிடித்துக் கொண்டு போவார்கள். கள்ளக் கடத்தல் செய்தான் என்று சில நாள் தேடிக் கொண்டு வருவார்கள். பல நாட்கள் இருக்கும் இடமே தெரியாமல் எங்கேயாவது தலைமறைவாய் இருந்துவிட்டு வருவான்.

அவனைக் காணாத போது, ஆத்திரம் கொண்ட மனம், பிள்ளையைக் கண்டதும் துடித்துப் போய்விடும். நெகிழ்ந்து போய்விடும்.

•

படபடவென்று வாசற்கதவு தட்டப்படும் ஓசை கேட்டதும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். அவளுக்கு முன் விழித்துக் கொண்ட ராஜப்பன் அவளைக் கட்டிக் கொண்டு கெஞ்சினான்.

''யாராவது என்னைத் தேடிண்டு வந்தா இல்லேன்னுடு...''

வயிறு கலங்க, கையில் லாந்தர் விளக்குடன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தவள் திடுக்கிட்டுப் போனாள்.

கையில் அரிவாள் கம்புகளோடு கூட்டமாய் யாரோ நிற்கவும் நடுங்கிப் போனாள்.

''யாரு? என்ன வேணும்?''

கையில் அரிவாளோடு நின்று கொண்டிருந்த ஒருவன் ஆக்ரோஷத்துடன் அவளிடம் வந்து ஒரு பர்ஸை நீட்டினான்.

''இது உன் மவன்தானே?''

நடுங்கும் கரங்களுடன் பர்ஸைப் பிரித்துப் பார்த்தாள். ராஜப்பன் படமும், அவன் விலாசமும் அதனுள் இருந்தன. திகிலுடன் 'ஆமாம்' என்றாள்.

''வீட்டிலே இருக்கானா?''

இரைவாய்க் கேட்டான் அவன்.

'இல்லை' என்கிற மாதிரி தலையாட்டினாள். பயத்தில் உடல் வெடவெட வென்று நடுங்கியது.

''நேத்து சாயங்காலம், ஒன் மவன் குப்பத்துலே ஒரு பொண்ணைக் கெடுத்துட்டான்மா. பம்பு செட்டுக் கெணத்துலே தண்ணிப் பிடிக்கப் போகையிலே அந்தப் பெண்ணை வழி மறிச்சுக் கெடுத்திட்டான்...''

ஒரு பெண்ணைக் கெடுத்திட்டானா? என் பிள்ளையா? ராஜப்பனா இப்படிப்பண்ணினான்?

வயிறு கொதிக்கக் கேட்டாள். ''என் பிள்ளைதான் பண்ணினானா?''

''ஆமாங்குறேன். அந்த ரோஷக்காரப் பொண்ணு, வீட்டுக்கு ஓடி வந்திடுச்சு. வர்ற போது அவன் கீழே விட்டிருந்த இந்தப் பர்ஸை எடுத்துக்கிட்டு வந்துடுச்சு. பின்னாலே மேலே கிருஷ்ணாயிலே ஊத்திக்கிட்டுப் பத்த வச்சு செத்துப்பூடுச்சம்மா. மூணு புள்ளைங்களுக்குத் தாயம்மா அது! புள்ளைங்களைத் தவிக்க விட்டுவிட்டு பூடுச்சிம்மா...''

கண்ணீரும் கம்பலையுமாய் அந்த மூன்று குழந்தைகள் தன் எதிரே நிற்பதைப் பார்த்துத் துடித்துப் போனாள் அன்னம்மா.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



''அதோ உமிழ்மணிபோல் ஒருவர் போகிறாரே, அவர்பக்கத்தில் ஒருவர் போகிறாரே அவர் யார்?''
''உமிழ் 'மினி'''
-கே. சம்பத் குமார்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

அக்னிப் பிழம்பாய் வயிறு கனன்றது.

கோபக்கனல் ஜ்வாலையாய் அவன் மீது வீச, ஒரு தீர்மானத்துடன் முகம் நிமிர்ந்தாள். சிம்னி விளக்கொளியில் அவள் முகம் கனன்றது.

''உள்ளேதான் படுத்துண்டு இருக்கான்..''

குரல் தெளிவாய் ஒலித்தது.

''டேய், சோமாறி, கயிதே. பொறுக்கி நாயே.'' பெருங்குரலில் கூவிக்கொண்டே உள்ளே பாய்ந்தனர் வந்தவர்கள்.

'அம்மா.... அம்மா' என்று உள்ளே ராஜப்பன் அலறுவது அவளுக்கு நன்றாகக் கேட்டது.

அசையாமல், ஆடாமல், தீர்மானமாய் நின்று கொண்டிருந்தாள்.

ராக்ஷசர்களும் லோகமாதாவின் குழந்தைகள்தாம். உலகத்தைக் காப்பாற்ற, தன் ராக்ஷசப் பிள்ளைகளை லோகமாதாவே சம்ஹாரம் பண்ணவில்லையா?

பாசம், துக்கம் ஆகியவற்றைத் தாண்டியவளாய் நின்று கொண்டிருந்தாள் அன்னம்மா.

உள்ளே ராஜப்பா நொறுங்கிக் கொண்டிருந்தான்.




பிலிப்ஸ்

புதிய பிலிப்ஸ் 3-பாண்டு

# கமாண்டர்

## இயந்திர வடிவிலே எழிலோங்கியது




ரூ. 495/-*

- இணையற்ற எர்கோனமிக் அமைப்பு
- பாண்டு தேர்வுக்கும் ஆன்-ஆ:ப் வசதிக்கும் டாகிள் ஸ்விட்ச்கள்

செட்டினுள்ளே ஓர் அடாப்டர் யூனிட்டைப் பொருத்தி மின்சாரத் திற்கு எளிதில் மாற்றலாம்.
(அடாப்டர் மாடல் 3012. ரூ. 60*)

* சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது.
மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.

**உன்னதமானவற்றை உங்களுக்கே வழங்க விரும்புகிறோம்.** இந்தியாவில் 50 ஆண்டுகள்

CASPR-726-203 TM

# போட்டிகள் போதும் போக்கு!

ஜி.ஜீ.கிருஷ்

[போட்டிகளைப் புகுத்தி வாசக எழுத்தாளர்களைத் திரை அடிக்கின்றன, பத்திரிகைகள். விரைவில் கீழ்க்கண்ட போட்டிகளை அந்தந்தப் பத்திரிகைகளில் எதிர் பார்க்கலாமா?]

## குங்குமம்

● அப்பளுவரத்திலிருந்து அம்மாஞ்சி எழுதுகிறார்: ''சென்ற வாரம் நான் வீட்டுக்கு லேட்டாகப் போனதும், குறுக்கு விசாரணை செய்த என் மனைவியிடம் கையில் சில்லறை இல்லாததால் ஆபீஸிலிருந்து நடந்தே வந்ததாகப் புளுகினேன். உண்மையில் சினிமாவுக்குத்தான் போயிருந்தேன்.''

—இந்த மாதிரி உங்களில் யாராவது செய்ததுண்டா? இருந்தால் சுவையாக அரைப் பக்கம் எழுதி (உங்கள் போட்டோவையும், துணிவிருந்தால் அனுப்பவும்) அனுப்புங்கள். உறையின் மீது 'நான் புளுகினேன்' என்று எழுதுங்கள்.



குறிப்பு: அறுபது வயதான பாட்டிகள் மட்டுமே இதில் கலந்து கொள்ளலாம்!

## குமுதம்

● ''வாசகர்களே! இந்த வாரம் எட்டுப் பிரதிகளில் மட்டும் சஞ்சய் காந்தியும் ராஜ்நாராயணனும் சேர்ந்து காட்சியளிக்கும் போட்டோ உள்ளது. அதை



பெற்றிருப்பவர்கள் எங்களுக்கு போன் செய்தால் அவர்களுக்கு மவுண்ட் ரோடு மங்களா பவனில் மசால் தோசையும், தயிர் வடையும் வாங்கித் தருவோம் — எங்கள் செலவில்!''

## கல்கி

● அப்பளம் பொரித்தால் எந்தக் குழம்பு வைக்க வேண்டும்?

வத்தல் குழம்பு — மோர்க் குழம்பு — புளிக் காய்ச்சல்.

தக்க காரணங்களுடன் எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். உறையின் மீது ''குழம்போ, குழம்பு!'' என்று குறிப்பிடுங்கள்.



## சாவி

● உங்கள் வீட்டில் கரடியாய்க் கத்திப் பேசுவது யார்? நீங்களா, உங்கள் மனைவியா, உங்கள் மாமியாரா? ஒரு பக்கக் கட்டுரை எழுதி 'நான் கண்ட கரடி' என்று உறையில் எழுதி அனுப்புங்கள். சிறந்த கட்டுரைகளுக்குத் 'தங்கக் கம்பிகள்' பரிசளிக்கப்படும். மொத்தம் பத்துத் தங்கக் கம்பிகள்— காது குடைவதற்கு உபயோகமாகும் படி உள்ளன. ஒவ்வொன்றும் அரை பவுன். யார் அதிர்ஷ்டசாலி?

(பத்திரிகாசிரியர்கள் மன்னிக்க!)






# மூன்று முழு நாவல்கள்

## வாலில்லாத பட்டங்கள்!

எழுதியவர்: வைஜயா

('துணுக்குப் படித்தே திருப்தியடைவான் தமிழன்!' என்கிற பாராட்டு சமீப காலத்தில் மறைந்து விட்டது. இன்று தமிழன் விரும்புவதெல்லாம் வாரமொரு சினிமாவும் மாதமொரு நாவலும். அது சிறு நாவலோ குறுநாவலோ அல்ல. முழு நாவல். எனவே இந்த மின்மினி சிறப்பிதழில் மூன்று முழு நாவல்கள் வெளியிடுகிறோம். இவை மூன்றே பக்கங்களில் முடிந்து விட்டாலும் (துணுக்குகள் நீங்கலாக) முப்பது முறை படித்தால் இன்றைய தமிழ் முழு நாவல்கள் நீளத்திற்கு ஈடாகும்.)

ஷிவா வெளியே எட்டிப் பார்த்தான். வானத்தில் மேகங்கள் இருந்தன. விமானங்கள் கண்ணில் படவில்லை.

ஷிவா கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் கீழே தெறித்து விழுந்தது. 'நல்ல வேளை இந்தக் கடிதத்தின் மீது விழவில்லை' என்று எண்ணிக் கொண்டான். அந்தக் கடிதம் மிருதுளா எழுதியது. 'இனியும் உன்னைப் பாராமல் என் கண் உறங்காது. உன்னைப் பார்த்துவிட்டால் என் உயிர் துஞ்சாது' என்று எழுதியிருந்தாள். இக்கடிதம் பற்றி அவளுடைய கணவனுக்குத் தெரியும். அவன்தான் அதற்குப் பசை ஒட்டித் தபாலில் சேர்த்திருந்தான். அவன் தபால் தலை ஒட்டவில்லை. இதன் காரணமாக ஷிவா இரட்டிப்புத் தபால் கட்டணம் அபராதம் கட்டி அக்கடிதத்தைப் பெற்றுக் கொள்ள வேண்டியிருந்தது.

'லவ் மீ' டீ ஷர்ட்டை எடுத்து அணிந்து கொண்டு ஷிவா உட்லண்ட்ஸ் டிரைவ் இன் ரெஸ்டாரண்டுக்குக் கிளம்பினான். டீ ஷர்ட்டின் ஒரு பையில் மிருதுளாவின் கடிதம் இருந்தது. இன்னொரு பையில் 'இண்டியா கிங்ஸ்' சிகரெட் பாக்கெட் இருந்தது. அவனுடைய ஜாவா மோட்டார் பைக் இஞ்சின் 2-5-8-3-2 என்கிற வரிசையில் வெடித்துக் கொண்டு ஸ்டெல்லா மேரிஸ் காலேஜைத் தாண்டிச் சென்றது.

அன்று டிரைவ் இன் ரெஸ்டாரெண்டில் விசேஷ மெனு புளியோதரையை மென்று கொண்டிருந்த சுரேஷ் ஷிவாவைப் பார்த்து "ஹாய்!" என்றான். ஷிவா சுரேஷைப் பார்த்து, "ஹாய்!" என்றான். இருவரும் அப்போதே உள்ளே வந்து கொண்டிருந்த ஷம்புவைப் பார்த்து, "ஹாய்!" என்றார்கள். ஷம்பு அவர்களைப் பார்த்து மெலிதாகப் புன்



**சிறியது கேட்கின்..**

இதுவரை உலகில் வெளியிடப்பட்ட 'ஸ்டாம்ப்'களிலேயே மிகச் சிறியது எது தெரியுமா?

தென் அமெரிக்காவில் 'பொலிவார்' தேசம் 1863-66ம் ஆண்டுகளில் வெளியிட்ட ஒரு தபால் தலைதான்! இந்த ஸ்டாம்பின் நீள அகலம் 0.31'' × 0.37''!

**மினி அறிவாளி!**

லெனின்கிராட் நகரைச் சேர்ந்த டாராஸ் சொர்னிலென்கோ ஒரு மினி ஜீனியஸ்! ஆம்; 14 மாதமே நிரம்பிய இச்சிறுவன் செய்தித்தாளைப் படிக்கிறான்!



னகை புரிந்தான். அது ஜிம் கெல்லியின் புன்னகையைப் போல இருந்தது. புரூ டைமண்டில் ஜிம் கெல்லி படம் இன்னமும் ஓடிக்கொண்டிருந்தது. தற்கொலை செய்து கொள்வதற்கு முன் அதைப் பார்த்தே தீர வேண்டும் என்று ஷிவா தீர்மானித்துக் கொண்டான்.

(நாவலின் இறுதியில் ஷிவா தற்கொலையும் புரிந்து கொள்ளாமல், ஜிம் கெல்லியின் படமும் பாராமல் அவனுடைய மன்னி அவனுக்குப் பார்த்து வைத்த பெண்ணை மணக்கச் சம்மதிக்கிறான்.)

வட்டம் வட்டமாக மழைத் துளிகள் நேர் கோடாக அவன் மீது விழுந்து கரைந்து கொண்டிருந்தன.



குறு நாவல்-2

# தாஜ்மஹால் ஒரு சாவி!

எழுதியவர்: நடாஷா ரம்பரா

—வந்தாயா?

—ஆமாம்.

—சரி, படுக்கையில் படு.

—படுக்கை எங்கே இருக்கிறது?

—படுக்கை இல்லாமல் படுக்க முடியாதோ?

—பழக்கமில்லை.

—நானெல்லாம் லாரி ஓட்டும் காளிம் நீ.

—நான் காளிம் ஆக இருந்தாலும் உனக்கு நான் ராகவன்தான், என் பிரமீளாவே!

—அப்படிச் சொல்லித்தான் என்னை பம்பாய் சிவப்பு விளக்கு ஏரியாவிலிருந்து கொண்டு வந்து இங்கு ஆக்ரா சிவப்பு விளக்கு ஏரியாவில் குடிபுக வைத்திருக்கிறாய்.



## சிறிய விதை

'எபிபிடிக் ஆர்கிட்' என்னும் விதைதான் விதைகளிலேயே மிகச் சிறியது.

ஒரு அவுன்ஸ் அளவுக்குச் சுமார் மூன்றரைக் கோடி விதைகள் தேறும்! அவ்வளவு சிறியவை!

---

## மினி ஏரோப்ளேன்!

ஒரு சிறிய கார் ஷெட்டில் நிறுத்தக்கூடிய அளவுக்குச் சிறிய 'மினி' ஏரோப்ளேன் ஜெர்மனியில் செய்யப்பட்டுள்ளது! இது 60 குதிரை திறன் என்ஜினைக் கொண்டது. இதன் எடையோ 430 கிலோதான்! இந்த விமானத்தைச் சிறியதாக மடிக்க முடியும்! இதன் விலை 30 ஆயிரம் மார்க்குகள். மணிக்கு 100 கி.மீ. வேகத்தில் பறக்கும்!



—பம்பாயை விட ஆக்ராவில் நல்ல சிநேகம் ணம். மேலும் தாஜ் மகால் இருக்கிறது.

—தாஜ் மகால் இருந்தால் எனக்கு என்ன?

—தாஜ் மகால் ஒரு சாவி மாதிரி.

—எதற்கு?

—காதலுக்கு. கல்யாணத்துக்கு, சினிமாவில் சேருவதற்கு. சினிமாவை விடுவதற்கு.

வெளியே லாரி ஹாரனை யாரோ ஒலிப்பது கேட்டது.

—போச்சு. ராம்சிங் வந்துவிட்டான்.

—யார் ராம் சிங்?

—அவன் உன் அடுத்த கணவன்!

—ஐயையோ, என்னை விற்றுவிடப் போகிறீயா?

—என் கண்ணே, நான் உன்னை விற்று விடுவேனா?

—எனக்குத் தெரியவில்லையே?

—இல்லை. அதைவிட மேலான பிளான் வைத்திருக்கிறேன்.

காஸிம் அவனுடைய பையிலிருந்து ஒரு சிறு தடி போன்றதை எடுக்கிறான். அதை எங்கேயோ தட்டுகிறான். அது உடனே ஒரு கத்தியாக மாறுகிறது.

—இதோ பார்.

—பார்த்தேன்.

—இதுதான் நீ ராம் சிங்குக்குத் தரவேண்டிய டிக்.

—அவனிடமே வேறு கத்திகள் இருக்கின்றனவே?

—முட்டாளே, இதைக் கொண்டு அவன் உயிரை வாங்க.

—அவன் உயிர் விற்பனைக்கு வந்திருக்கிறதா?

—தாத்தேரி!

(ஐம்பது பக்கங்களுக்குப் பிறகு அதே கத்தி கொண்டு ராம்சிங் காஸிமைக் குத்த பிரயீனா இறந்து போகிறாள். போலீசார் காஸிம், ராம்சிங் அவர்களுடைய எஜமானன் எல்லோரையும் கைது செய்து லாரியையும் பறிமுதல் செய்கிறார்கள். லாரியின் பாட்டரி பாக்ஸில் ராம்சிங் XXX மூன்று சிறு பாட்டில்கள் வைத்திருக்கிறான். குடிப்பாகின்றி மூன்று XXXம் YYY எனக் கதறுகின்றன.)






**மிகச் சிறிய இனம்**

உலகிலேயே இன்று மிகச் சிறிய எண்ணிக்கையைக் கொண்ட இனம் எது தெரியுமா? அந்தமான் தீவில் வசிக்கும் 'மெக்ரிடோ ஓங்கே' என்ற இனம்தான். இவ்வினத்தைச் சேர்ந்தவர்கள் இப்போது 22 பேர்தான் இருக்கிறார்கள்!

---

**மிகச் சிறிய செய்தித் தாள்!**

லண்டனைச் சேர்ந்த 'மார்க் ஹோகன்' என்பவர்தான் உலகிலேயே மிகச் சிறிய செய்தித் தாளை வெளியிடுபவர்.

இவர் வெளியிடும் செய்தித் தாளின் அளவு ஒரு அங்குலத்துக்கு ஒன்னேகால் அங்குலம்!



உத்தம் அண்ட் கம்பெனியின் சீஃப் எக்ஸிக்யூடிவ் சிவராமன்முகத்தில் கவலைக்கோடுகள் நிரம்பியிருந்தன. ஸ்டியரிங் வீல் பின்னால் அமர்ந்திருந்த அவன் ரியர் வியூ கண்ணாடியில் அந்தக் கோடுகள் நிரந்தரப் பள்ளங்களை உண்டுபண்ணி விடுமோ எனக் கூடப் பயந்தான். அன்றுதான் டாக்டர் சாக்ஸேனாவின் நர்ஸிங் ஹோமிலிருந்து ஒரு விசேஷ மெடிகல் ரிப்போர்ட் அவனுக்குஅனுப்பப்பட்டிருந்தது. அதில் அவனுடைய மனைவியின் முதல் பிரசவத்தில் இரட்டைக் குழந்தைகள் பிறக்கப் போவதாகக் கண்டிருந்தது. அதோடு நிற்கவில்லை. அதற்கடுத்த பிரசவத்தில் நான்கு குழந்தைகள், அதற்கும் அடுத்ததில் எட்டுக் குழந்தைகள் என்று மொத்தம் எட்டுப் பிரசவங்கள் நிகழும் என்றும் காணப்பட்டது. சிவராமன் தன் பாக்கெட் கால்குலேட்டரில் கணக்குப் போட்டுப் பார்த்தான். மொத்தம் ஐந்நூற்றுப் பத்துக் குழந்தைகள்.

சிவராமன் பெருமூச்சு விட்டான். ஐந்நூற்றுப் பத்துக் குழந்தைகளுக்கு அவன் எப்படிப் பெயர் வைக்கப் போகிறான்? நல்லவேளையாக நிறையக் கடவுள்களுக்கு சகஸ்ரநாமம் இருந்தது. ஆனால் சகஸ்ரநாமம் பெயரை வைத்ததற்காகப் பிற்காலத்தில் அக்குழந்தைகள் அவனுடன் சண்டைக்கு வந்தால் என்ன செய்வது?

சிவராமன் உடனே நியூயார்க் போய்விடலாமா என்று யோசித்தான். அங்கு அவனுக்கு ரோஸ்மேரி என்றொரு காதலி இருந்தாள். அவளால் சிவராமனின் பாக்கெட் கால்குலேட்டருக்கு எந்தத் தொந்தரவும் இருக்காது. இந்தியப் பெண்கள்தான் முயல் குட்டி போடுவதுபோல தெருக்கடிகளை உண்டு பண்ணி விடுகிறார்கள். இதற்காகவாவது ஆஸ்திரேலியாவில் சிறிது நாட்கள் இருந்து விட்டு வரவேண்டும். முயல் ஒழிப்பில் அந்த நாடு புகழ் பெற்றது.

சட்டென்று அவனுக்கு ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அன்று ரோட்டரி கிளப் ஒரு பத்திரிகை ஆசிரியருக்குப் பாராட்டுக் கூட்டம் கன்னிமாரா ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தது. சிவராமன் அந்த ஆசிரியரைப் பாராட்டிப் பேச வேண்டும்.

ஒரே சூட்டும் கோட்டும் பைப்புமாக இருந்த அந்தக் கூட்டத்தில் அந்தப் பத்திரிகை ஆசிரியர் உச்சிக் குடுமியும் கதர் ஜிப்பாவுமாகத் தனித்து நின்றார். அவரைப் பாராட்டிப் பேச சிவராமன் எழுந்தபோது அவனுடைய மூளையில் ஏனோ திரும்பத் திரும்ப 'பாபா பிளாக் ஷீப், ஹாவ் யூ எனி வுல்?' என்ற குழந்தைகள் பாட்டே தொனித்துக் கொண்டிருந்தது. இதே பாட்டை ஐந்நூற்றுப் பத்துக் குழந்தைகள் சேர்ந்து பாடினால் எப்படி இருக்கும் என்று ஒரு கணம் அவன் கற்பனை செய்து பார்த்தான். அப்படியே மரமாக மூர்ச்சை போட்டு விழுந்தான்.

(இப்படிப் பல விறுவிறுப்பான சம்பவங்கள் சென்னையிலும் பம்பாயிலும் நியூயார்க்கிலும் டோக்கியோவிலும் நிகழ்கின்றன. நாவல் இறுதியில்-

ஒரு கரடி காட்டு வாத்தாகிறது!)

— ரவி சங்கர் : ராமகிருஷ்ணன்

சில பேர் வெண் குஷ்டத்தை தொத்து நோய் என்று எண்ணிக் கொண்டு இருக்கிறார்கள். இது தவறு. பழைய மாங்கொட்டைகளிலிருந்து (குறைந்த பட்சம் அதை பறித்து இரண்டு வருடமாவது ஆகியிருக்க வேண்டும்) பருப்பு எடுத்து 'பன்னீர்' விட்டுக் குழைய அரைத்து அதை வெண் குஷ்டம் கண்டுள்ள இடத்தில் தினந்தோறும் இரண்டு முறை தடவி வந்தால் அந்த இடத்தில் தோல் சகஜமாகி விடும்.

ஒரு பழைய வைத்திய நூலிலிருந்து

- வசந்தா

## உலக ரிக்கார்டு

கல்கத்தாவைச் சேர்ந்த முராரி ஆதித்யா சிறிய விஷயத்தில் பெரிய உலக ரிக்கார்டு ஏற்படுத்தியிருக்கிறார்.

இவரது இடது கையில் உள்ள ஐந்து நகங்களின் மொத்த நீளம் ஐம்பத்தி ஐந்தரை அங்குலம்! இது ஒரு உலக ரிக்கார்டு. இதை வளர்க்க இவருக்கு 12 வருடங்கள் ஆயிற்று.

## அதிசயப் புத்தகங்கள்

உலகின் மிகச் சிறிய புத்தகங்கள் மாஸ்கோவெனின் புத்தகசாலையில் இருக்கின்றன.

இங்கு நாணயங்கள் அளவிலும் பாட்டில் 'கார்க்'களிலும் எழுதப்பட்ட புத்தகங்களும், பட்டில் எம்பிராய்டரி செய்யப்பட்ட எழுத்துக்களைக் கொண்ட புத்தகங்களும் உள்ளன!

—சம்பத்குமாரி - ஆதாரம்: 'விஸ்டம்'

குடும்ப நலத் திட்டம் என்றால் ரொம்பப் பேர் குடும்பக் கட்டுப்பாடு என்றுதான் நினைக்கிறார்கள். மக்கள் தொகை அதிகமானால் ஏற்படக்கூடிய ஆபத்துகளை யெல்லாம் உணர்ந்திருப்பது அவசியமே. ஆனால் குடும்ப நலத்திட்டம் என்பது அதுமட்டுமல்ல. கிட்டத்தட்ட ஆறு பகுதிகளாக அது பிரிக்கப்பட்டிருக்கிறது. நல்ல ஆரோக்கியமான குழந்தைகளைப் பெறுவது என்பது அதில் ஒரு பகுதி.

ஆராய்ந்து பார்த்தால் நிறையக் குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு துன்பப்படுபவர்களைவிடக் குழந்தையே இல்லை என்பவர்களின் வேதனை அதிகமானதுதான். அப்படிப் பட்டவர்களைப் பரிசோதனை செய்யவும் தகுந்த ஆலோசனைகள் கூறவும் குடும்ப நலத்திட்டம் செயல்படுகிறது.

சாதாரணமாகத் தோட்டத்தில் தென்னம் பிள்ளைகளை வைத்தால்கூட ஒரளவு இடைவெளி கண்டிப்பாக வைத்துத்தான் பயிரிடுகிறோம். அந்த இடைவெளி, மரங்கள் நன்றாக வளரத் தேவை. தென்னைக்கே அப்படியானால் குழந்தைகள் ஆரோக்கியமாகத் திகழ இடைவெளி வேண்டாமா?

நிறைய குழந்தைகள் பிறந்து விடுவது ஒரு பலமான சமுதாயத்தை வளர்க்க உதவாது. புத்திசாலியான தைரியமான குழந்தைகள்தாம் நம் நாட்டுக்கு இப்போது தேவை. ஆரோக்கியமான குழந்தைகள் நாட்டின் பெரிய பலம்.

நெருங்கிய உறவுக்குள் கல்யாணம் செய்வதைத் தவிர்ப்பது நல்லது. ரொம்ப நெருங்கிய உறவில் குழந்தைகளே பிறக்காமல் போகலாம். சில சமயங்களில் உடலோ மூளையோ முழு வளர்ச்சி அடையாமல் குழந்தைகள் பிறப்பதற்கும் நெருங்கிய உறவுத் திருமணம் காரணமாகிறது.




கணவனோ அல்லது மனைவியோ எந்த வியாதியாலாவது தீவிரமாகப் பாதிக்கப்பட்டிருக்கும் போது ஜனிக்கும் குழந்தைகளுக்கும் அந்த வியாதி பிறவியிலேயே வந்து விடுகிறது. ஒரு நோயாளியான குழந்தையைப் பிரசவித்து அதனைத் துன்பப்படச் செய்யும் உரிமை யாருக்கும் கிடையாது!

இத்தனை குழந்தை இருக்கலாம் எனச் சட்டம் போடுவதோ விவாதிப்பதோ புத்திசாலித்தனமாகாது. பெற்றோர்கள் தங்களுக்குள் விவாதித்துத் தீர்மானிக்க வேண்டிய விஷயம் இது. குழந்தையின் பெற்றோர்களுக்குப் பொறுப்பு அதிகம். பிறக்கும் ஒவ்வொரு குழந்தையையும் ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள நம்மால் முடியுமா? அதற்குத் தேவையான சத்துள்ள உணவாகத் தர முடியுமா? அதற்கு நல்ல கல்வி அளித்துச் சமூகத்தில் ஒரு நல்ல நிலையை ஏற்படுத்த முடியுமா? என்பதையெல்லாம் ஒவ்வொரு தந்தையும் தாயும் மனசாட்சிக்கு விரோதம் இல்லாமல் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பாமர மக்களுக்கு இந்த விஷயங்களைப் புரியும் வகையில் எடுத்துச் சொல்வது அவசியம்.

குழந்தை இல்லை எனக்குறை படுபவர்களில் சிலரை எடுத்து ஆராய்ந்தால் அவர்களுடைய அறியாமைதான் பல சமயங்களில் காரணமாக அமைகிறது! என்னிடம் மருத்துவ ஆலோசனைக்காக ஒரு தம்பதியர் வந்தனர். திருமணமாகி ஆறு வருடங்களாகியும் குழந்தை ஜனிக்கவேயில்லை என வருத்தப்பட்டனர். கணவன் நன்றாகப் படித்துப் பட்டம் பெற்றவர். உயர்ந்த பதவி. செல்வக் குடும்பம். இருவருமே பரிசோதனை செய்து கொண்டனர். எல்லாமே சரியாகத்தான் இருந்தது. குழந்தை பிறக்காததற்குக் காரணமே புரியவில்லை. எனக்கும் என் டாக்டர் மனைவிக்கும் ஒரே பிரமிப்பு. கடைசியில் பரிசோதித்தால் மட்டும் போதாது, பேசிப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்து என் மனைவி அந்தரங்கமான சில கேள்விகளை அவளிடம் கேட்டாள்.

அந்தப் பெண்மணி உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள். சுகாதாரத்தையும் சுத்தத்தையும் பற்றிப் பெரியவர்கள் நிறையச் சொல்லியிருந்தார்கள். ஒவ்வொரு முறையும் கணவன் மனைவி சந்தித்ததும் அவள் டெட்டால் கலந்த நீரால் தன்னை சுத்தப்படுத்திக் கொள்வதாகச் சொன்னாள். இதைக் கூறியதும் என் மனைவி ஆறு வருடங்களாக அவர்களுக்குக் குழந்தை பிறக்காத காரணத்தைப் புரிந்து கொண்டாள். பிறகு அந்தப் பெண்மணிக்கு அவள் செய்கிற தவறை எடுத்துக் கூறினோம். கிருமிநாசினியை எப்போது பயன்படுத்தலாம் எப்போது உபயோகிக்கக்கூடாது என்று காரணங்களோடு விளக்கினோம். இப்பொழுது அவளுக்கு ஓர் ஆண் மகன் இருக்கிறான்.

டாக்டர்கள் : சௌரிராஜன்
ருக்மிணி சௌரிராஜன்
பேட்டி : குமிலி ராஜேஸ்வரி

“இப்படிக்கூடவா நடக்க முடியும், நம்பமுடியலியே கணேஷ்!”

தன்ராஜுக்கு இப்படித்தான் எதிலேயும் எப்பவும் சந்தேகம். நடந்ததை, பார்த்ததை, கேட்டதைச் சொன்னால்தான் ஏற்றுக்கொள்வான்.

அதுவரைக்கும் கேள்வி மேலே கேள்வி கேட்டுத் துளைத்து எடுத்து விடுவான்.

இரண்டாவது காட்சி பார்த்துவிட்டு அண்ணா சாலையிலிருந்து விலகி, பிரிந்து ஒயிட்ஸ் ரோடில் நுழைந்து கொண்டிருந்தார்கள்.



# க்ராஸ்டாக்

-மு. ராஜேந்திரன்

பார்த்த படத்தின் க்ளைமாக்ஸ் தான் தன்ராஜுவைத் திருப்திப்படுத்தவில்லை.

“என்ன கணேஷ், முடிவை உன்னாலே ஒப்புக்க முடியுதா?”

'ஓ'வென்றிருந்த அந்தப் பகுதியின் மௌனத்தைக் கலைத்தான். தொந்தரவு செய்தான்.

பாய் தலையணை இல்லாமல் அப்படியே படுக்கச் சொல்லித் தூண்டும்படியாக, சுத்தமாகப் போக்கு வரத்தில்லாமலிருந்தது ரோடு.

அங்கொருவரும் இங்கு ஒருவருமாக நபர்கள். நாய்கள் கூடக் காணோம்.

மெதுவாக நடந்தார்கள்.

அந்த ரோடிலிருந்து இன்னும் பிரிந்தார்கள். குறுக்கு வழியில் நடந்தால் தங்கியிருக்கும் மேன்ஷன் அருகில் வந்துவிடும்.

“என்ன பேசாமல் இருக்கே? நம்ப முடியுதா?” என்று விடாமல் கிண்டினான் தன்ராஜ்.

சொல்லாமல் விட்டால் இரவு தூங்க விட மாட்டான் என்று தோன்றவே, அந்தப் பயத்தில் பதில் சொன்னான், கணேஷ்.

“முடியுது.”

சொன்ன கணேஷைப் பார்த்தான் தன்ராஜ்.

ஒரே நிசப்தம்.

'எப்படி?' என்ற கேள்வி மங்கிப் போயிருந்த தெரு விளக்கின் கொஞ்ச வெளிச்சத்தில் தெரிந்த தன்ராஜின் முகத்தில் இருந்தது.

ஜிப்பை இழுத்துவிட்டு 'ரோடு ஓரம் ஒதுங்குவோமே' என்றான் தன்ராஜ். 'இண்டர் மிஷன்போது கூடப் போகவில்லை.'

கொஞ்சம் பொறுத்துக் கொள்ளச் சொல்லி விட்டுக் கணேஷ் சுவாரஸ்யமாகச் சொல்ல ஆரம்பித்தான்.

போன வருஷம் நண்பர் ஒருவரைப் பார்க்க அவருடைய ஆபீசுக்குப் போனேன்.

அப்போது லஞ்ச் டைம். இரண்டு பேருமாக ஆபீஸ் கான்டீனுக்குப் போனோம்.

நூறுக்கும் அதிகமானவர்கள் வேலை செய்யும் ஆபீஸ் அது. குறைந்தபட்சம் நூறு பேராவது அப்போது கேன்டீனில் இருந்தனர்.

ஒரே சத்தம். எல்லோரும் பேசிக் கொண்டே சாப்பிட்டு கொண்டிருந்தார்கள்.

ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வது அவரவர்களுக்குக் கேட்கிறது. புரிந்து கொள்கிறார்கள்.

மொத்தமாகக் கேட்பவர்களுக்குப் பொதுவாக எதுவுமே புரியாது. ஒரே நேரத்தில் சிலோன், ஹைதராபாத், பாகிஸ்தான் ரேடியோ கேட்கிற மாதிரியான தெளிவுதான் இருக்கும். இரைச்சல்.

நண்பரோடு பேசிக் கொண்டே ஒரு குறிப்பிட்ட பேச்சை மட்டும் என்னால் கிரகிக்க முடியுமா என்று முயற்சி செய்தேன். விளையாட்டாகத்தான்!

எங்களுக்கு மூன்றாவது டேபிள் பெண்களின் அரட்டையை சகித்தேன்.

அவ்வளவு ஆரவாரங்களிலிருந்து தனித்து அந்தப் பெண்களின் வம்பளப்புகளில் இணைய முயற்சி செய்தேன். முடிந்தது.

ஹாஸ் டாக்.

சுமா அவுட் ஆஃப் டோர். கணவர்தான் சமையல். செக்ஷனில் ஒருத்தன் கொண்டு வந்த சாரியை இன்ஸ்டால்மெண்டில் ஜெயா வாங்கியிருக்கிறாள். புதுசாச் செய்த பேஸரியை எல்லோருக்கும் காட்டுவதற்காக உதயா கொண்டு வந்திருக்கிறாள். கதவைச் சரியாகப் பூட்டினோமோ என்ற சந்தேகம் நந்தாவுக்குப் பயத்தைத் தந்தது. ரமா அவளுடைய மாமி யாரைப் பற்றி ஆரம்பித்தாள்.

ரேடியோவில் அலைன்மெண்டைச் சரி பண்ணிக்கிற மாதிரி. சரியான ஸ்டேஷனைப் பெற வால்யூமைக் கூட்டுகிற மாதிரி, டேப் ரிகார்டரில் டேப்பை ஓட்டுகிற மாதிரி... இல்லை, ஸ்டேஷனுக்கு ஏற்ப அலைவரிசையை மாற்றுகிற மாதிரி...

ரேடியோவில் அலைன்மெண்டைச் சரி பண்ணிக்கிற மாதிரி. சரியான ஸ்டேஷன் அலைவரிசையில் டி.வி.யை நேர் செய்து ரசிக்கும் படி செய்து கொள்கிற மாதிரி, நானும் என்னுடைய கிரகிப்பை மாற்றினேன்.

சில நேரங்களில் போன் லைன் சில ரேடியோவில் க்ராஸ் ஆகுமே, அப்படியொரு பேச்சு 'சட்'டென்று வெட்டியது.

இன்னொரு ஹாஸ் டாக்.

என்னுடைய முதுகுக்குப் பின்னாலிருந்த டேபிளிலிருந்து வந்து கொண்டிருந்தது.

ஒருவன் அதே ஆபீஸ் நபர். எதிர் பேச்சில் இருப்பவன் வெளி ஆசாமியாகத்தான் இருக்க வேண்டும். பேசிக்கொண்டதில் தெரிந்தது.

'டெண்டர்' விஷயமான ஒரு ரகசியத்தைப் பரிமாறிக் கொள்ளப் பேசினார்கள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



மனைவி: ஏங்க காஸும் தீர்ந்து போச்சு, விறகும் தீர்ந்து போச்சு. கிரோஸினும் இல்லை.
கணவன்: எனக்குத் தெரியும்!
மனைவி:- எப்படித் தெரியும்?
கணவன்:- இன்னிக்குத் தானே எங்கப்பா, அம்மா வர்றதா கடிதம் எழுதியிருக்காங்க.

-ஆர். கோபாலகிருஷ்ணன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

'சாதகம்' செய்வதில் உறுதி தர வெளி ஆசாமியிடம் நம்பிக்கை ஏற்பட்டது.

'ஆபீஸ்' கைமாற வேண்டிய தொகையைச் சொன்னது. 'வெளி' ஒப்புக் கொண்டது. விஷயம் வெளியே தெரியாமல் காப்பாற்றுவதாகச் சத்தியம் பண்ணியது.

இடம், தேதி, நேரம் பேசிக் கொள்ளப்பட்டது. பேப்பர் 'மோட மோட'த்தது. ஆசாமி குறித்துக் கொண்டிருக்க வேண்டும்.

கவலையில்லாமல் பேசி முடித்தார்கள்.

திரும்பிப் பார்க்கலாமா என்று நினைத்த மாத்திரத்திலேயே நண்பர், பொங்கல் கொத்சுக்கு காபேஜ் வடை எப்படி என்று கேட்டார்.

அவருக்குத் திருப்தி தரும் வகையில் விளக்கிவிட்டுத் திரும்பினேன். டேபிள் காலியாகிவிட்டிருந்தது.

ரகசியம் கைமாறப் போகும் நேரம், தேதி, இடம் ஞாபகம் இருந்தது.

பெரிய சதியைத் தெரிந்து கொண்டதில் ஒருவித 'த்ரில்' இருந்தது. கொஞ்சம் பயமாகவும் இருந்தது.

நண்பரிடமிருந்து விடை பெற்றுக்கொண்டேன்.

எனக்குத் தெரிந்த ஒரு சப் இன்ஸ்பெக்டரிடம் தகவல் சொன்னேன்.

அவார்ட் கிடைக்கும் என்றார். என்னுடைய பெயரையும் கடைசி வரை ரகசியமாகவே வைத்துக் கொண்டார்கள்.

''அப்புறம்?''

ஆவலோடு கேட்டுக் கொண்டிருந்த தன்ராஜுவால் இனியும் 'பொறுத்துக் கொள்ள' முடியாமல் சுற்று முற்றும் பார்த்தான்.

அவர்களுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த ஆள் தன்னைக் கடந்துவிட, பேசாமல் தன்ராஜ் கலரோரம் ஒதுங்கி ஜிப்பை இழுத்தான்.

ஆரம்பித்த சுவாரஸ்யத்திலேயே சொல்லிக்கொண்டு நடந்தான் கணேஷ்.

''அப்புறமென்ன, போலீஸ் சரியா மடக்கிட்டாங்க. அந்த ஆபீஸ்லே அவன் க்ளாஸ் ஃபோராம். எதிர்பார்க்கலே. வேலை போயிட்டது. என்னைக் காட்டிக் கொடுத்தவனைப் பழி வாங்காம விடமாட்டேன்னு அரஸ்ட் பண்ணும்போது கத்தினானாம். சப்-இன்ஸ்பெக்டர் அப்புறமாச் சொன்னார். பைத்தியக்காரன் என்னை எப்படிக் கண்டுபிடிப்பான்....''

பின்னால் நடந்து வந்த தன்ராஜுவிடமிருந்து பதில் ஏதுமில்லாததால், ''இப்ப நீ நம்பறியா?'' என்று கேட்டுக் கொண்டே திரும்ப.....

''அடப் பாவி, நீதான் என்னை ஜெயிலுக்கு அனுப்பினியா?'' கத்திக் கொண்டே கணேஷ் மீது கத்தியுடன் பாய்ந்தவன் பைத்தியக்காரன் மாதிரி இருந்தான்.

கணேஷின் அலறலைக் கேட்டு, பின்னால் தூரத்தில் நடந்து வந்த தன்ராஜ், ஓடி வந்து கொண்டிருந்தான்!

# தயான் விஜயம் தேர்தல் பிரச்னையா?



கே. ஸ்ரீனிவாசன்

சர்வதேச சாணக்கியத்தில் இன்று எந்த நாடு எந்த நாட்டின் உதவியை நாடும் என்று சொல்வதற்கில்லை. 1962-ல் நம்மைத் தாக்கிய சீனு இன்று நம் உறவை நாடுகிறது. வெட்டுப்பழி, குத்துப்பழி என்று இருந்த அமெரிக்கா - சீனு உறவு நல்ல தோழமையில் முடிவதற்குக் காரணம் டாக்டர் கிஸிஞ்ஜரின் ரகசிய விஜயம். டாக்டர் கிஸிஞ்ஜர் சீனு போகப் போகிறார் என்பது பாகிஸ்தானுக்குத் தெரியும். ஆனால் நம் அயல்நாட்டு மந்திரி சபைக்குத் தெரியாது. அவ்வளவு பிரமாத செயல்பாடு. இன்று இருவித சூழல்கள் உலகில் உள்ளன. ஒன்று எண்ணெய் அரசியல் சூழல். இதில் அதிர்ஷ்டவசமாக மதமும் கலந்து விட்டிருக்கிறது.

மற்றது ரஷ்யாவின் போர்க் கோலம். தென்னை மரத்தில் ஏறிய திருடன் தான் புல்பிடுங்கவே ஏறியதாகச் சொல்லவில்லையா? ஆப்கானிஸ்தானில் தோழமை அரசுக்கு ஆபத்து என்று ரஷ்யா தலையிட்டதாம்! கார்மல் அரசு இன்று நங்கூரம் போல ஸ்திரமாகி விட்டதே! ரஷ்யப் படைகள் ஏன் இன்னும் வாபஸாகவில்லை?

ரஷ்யாவைப் பொறுத்த வரை சீனுவின் கொள்கை அது தன் பரமவிரோதி! இரண்டும் கம்யூனிஸ்ட் நாடுகள்தான். ஆனால் ஒன்று அத்வைத மதம். மற்றொன்று விசிஷ்டாத்வைதம். ரஷ்யா அத்வைதி.

இந்தியாவைப் பொறுத்த வரை, ஜனதா கட்சி நடைமுறை கோணத்திலிருந்து பிரச்னைகளை அணுகிற்று. இன்று திருமதி காந்தி எதற்காகத் தன் அந்நிய வியவகார காரிய தரிசியை பாகிஸ்தானுக்கு அனுப்புகிறார்? எப்படியாவது ஆப்கானிஸ்தான் பிரச்னை தீர வேண்டும் என்பதற்காக.

அதே போல் பிரதமர் தேசாய் இஸ்ரேல் பிரச்னை தீர்ந்தால் மேற்கு ஆசிய பிரச்னைக்குத் தீர்வு காணலாம் என்று நம்பினார். இஸ்ரேலைச் சுற்றி ஜன்ம விரோதிகள். அது ராகு காலத்தில் ஜனித்ததோ என்னவோ பிறந்தது முதல் செவ்வாய் தோஷம். ஒவ்வொரு இஸ்ரேலியும் துப்பாக்கியே துணை என்று செயல்படவேண்டியிருக்கிறது. இஸ்ரேல் என்ற நாடு உண்டு என்பதை இந்தியா ஒப்புக் கொண்டுள்ளது. அராபிய நாடுகள் இஸ்ரேலை அழிக்கவே கங்கணம் கட்டிக் கொண்டுள்ளன. இந்த நிலைமை வெகு காலமாக நீடிக்கிறது. அதிகம் நீடித்தால் எண்ணெய்க்கு ஆபத்து.

ஸ்ரீ தேசாய் அரசு திறந்த முறையில் செயல்பட்டது. அதாவது இன்று உள்ள நிலைமைக்கு நேர் எதிர். ஆகவே ஸ்ரீ மோஷே தயானின் விஜயத்தை ரகசியமாக வைத்துக் கொண்டிருந்ததற்கு அதை மெச்ச வேண்டும்.

சர்வதேச சாணக்கியத்தில் யாரும் நிரந்தரப் பகைவனே அல்லது தோழனே அல்ல. ஸ்ரீ தேசாய் அரசு அரபுப் பிரச்னைக்குத் தீர்வு கண்டிருந்தால் எல்லோரும் 'பேஷ்' போட்டிருப்பார்கள்,

ஸ்ரீ தயான் இந்தியாவுக்கு விஜயம் செய்தது மெச்ச வேண்டிய திருப்பம். இன்று விலைவாசி ஏறுமுகம், சட்டம் — ஒழுங்கு இல்லாமை போன்றவற்றைச் சமாளிக்க முடியாத மத்திய அரசு தயான் விஜயத்தை ஒரு அரசியல் பிரச்னையாக்கிப் பார்த்தது மகாகேவலம்.

## திரைக்கதை சிறப்பிதழ்-வாசகர் பங்கு

சினிமா பார்த்துத் திரும்பும் போதே 'அந்தக் காட்சி பொருத்தமில்லாதிருந்ததே' என்று தோன்றியதுண்டா? அதுபற்றி சுருக்கமாக நறுக்குத் தெறித்தாற்போல வினு எழுப்புங்கள். திரைக்கதை வசனகர்த்தாவோ அல்லது இயக்குனரோ அல்லது இருவருமேயோ பதிலளிப்பார்கள். திரைக்கதை சிறப்பிதழில் பிரசுரமாகும் சிறந்த கேள்விகளுக்குப் பரிசு உண்டு.

படங்கள்:

● 'அவன் அவள் அது ● மழலைப் பட்டாளங்கள் ● பூட்டாத பூட்டுக்கள் ● ரிஷிமூலம் ● பில்லா.

மேலே குறிப்பிட்ட படங்களைப் பற்றி மட்டுமே கேள்விகள் கேட்கலாம். ஒருவர் ஒரு கேள்விக்கு மேல் கேட்கக் கூடாது. தபால் கார்டில் மட்டுமே எழுதி அனுப்ப வேண்டும். தலைப்பில் 'பொருத்தமற்ற காட்சி' என்று குறிப்பிட்டுக் கேள்வியை எழுப்ப வேண்டும். முடிவு தேதி 6-6-80. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. கடிதப் போக்குவரத்து இடையாது. கேள்விகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. உங்கள் விலாசத்தை மறவாமல் தெளிவாக எழுதவும்.

ஆசிரியர் கல்கி, சென்னை-600032

THE SPOT

# ரஜனியைக் காணோம்!

முதல் நாள் டாப் ஸ்லிப்பில் நடந்த படப்பிடிப்பு அடுத்த நாள் பொள்ளாச்சியிலிருந்து 22 கிலோ மீட்டர் தூரத்தில் மாந்தோட்டம் ஒன்றில் நடைபெற்றது. படப்பிடிப்பு நடக்குமிடத்தை அடைந்த பொழுது ஏதோ பெரிய சாதனை செய்து விட்டது போன்ற உணர்வுதான் எல்லோருக்குமே ஏற்பட்டது. காரணம் பாதை மேடும் பள்ளமுமாக, கல்லும் மண்ணுமாக அவ்வளவு மோசம்.

மாட்டு வண்டி நடத்தில் அம்பாஸிடர் கார் ஆடி அசைந்து குலுங்கிச் சென்று சாதனை புரிந்தது.

இந்தத் தோட்டம் மட்டுமல்ல. இது போன்று பல ஏகராக்கள் திரு முத்துமாணிக்கம் அவர்களுக்குச் சொந்தமானது. வேட்டையாடுவதில் வல்லவரான அவர், சினிமா நடிகர்கள் பலருக்கு வேட்டையாடுவது எப்படி என்று சொல்லிக் கொடுத்திருக்கிறார். எங்கு நோக்கினும் வயல் வெளிகளும் பல்வேறு விதமான மாமரங்களும் இருந்தன. நாங்கள் காரை விட்டு இறங்கும் போதே ரஜனி காந்த் நடித்துக் கொண்டிருந்தார்.

''இவ்வளவு காலையிலேயே கிளம்பியாகி விட்டதா?'' என்றேன் நான்.

''வெளிப்புறப் படப்பிடிப்பு என்றும் வெய்யில் தேவை. வெய்யில் வரும் போது நாம் இல்லாவிட்டால் படப்பிடிப்பு தடை படுமல்லவா?'' என்றார். நான் ''இவ்வளவு சீக்கிரம் தயாரா?'' என்று கேட்டதற்குக் காரணம் உண்டு. முதல் நாள் அவருக்கு ஜுரம்; வயிறும் சரியில்லை. இந்த நிலையிலும் படப்பிடிப்புக்குத் தாமதமின்றி வந்து விட்டார் என்றால் தொழிலின் மீது அக்கறை மட்டு மல்ல பக்தி என்று கூடச் சொல்லலாம். சண்டைக் காட்சி படமாகியது. நாலைந்து முரடர்களுடன் ரஜனி காந்த் ஆக்ரோஷமாகச் சண்டையிடுவதைப் படமாக்கிக் கொண்டிருந்தார்கள். சாந்தா ராம் என்ற புது நடிகர் இப்படத்தில் வில்லனாக நடிக்கிறார். அவர் ஜெய்சங்கரின் நெருங்கிய தோழர். ஜெய்சங்கர் சொல்வதை அப்படியே கேட்டு நடப்பவர். மிகவும் இயற்கையாக அவர் நடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்து அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். பாலசந்தரின் பள்ளியிலிருந்து வந்தவர். இயல்பாக நடிக்கக் கே-

⌘ 'முரட்டுக்காளை' - ஜெய்சங்கர், ரஜனிகாந்த்





⌘ ஜெய்சங்கர், ரத்தி



ஜெய்சங்கர், ரஜனிகாந்த் இயக்குனர் எஸ். பி. முத்துராமன்; படுத்துக்கொண்டு ஒளிப்பதிவு செய்பவர் ஒளிப்பதிவாளர் 'பாபு'



சுருளிராஜன்

பாலேன்! நினைவிருக்கிறதா? 'தப்புத் தாளங்கள்' படத்தில் தனது மகளையே எதிர்பாராத ஒரு இடத்தில் சந்திக்கும் தந்தையின் வேடத்தில் நடித்திருக்கிறார். இவர்களுடன் ஒய். ஜி. மகேந்திரா, ராஜப்பா, என்று ஒரு பெரிய பட்டாளமே இருந்தது.

சுருளிராஜனும் உண்டு; ஆனால் அவர் ஓரமாக ஒரு சிறு கல் மலையின் மீது உட்கார்ந்திருக்கிறார் என்று அறிந்ததும் சுருளியை நோக்கி விரைந்தேன். ஷோபா மரணம் முதல் பாஸ்கரா செயற்கைக் கோள் வரை எல்லாவற்றையும் பேசித் தீர்த்தோம். ஆனாலும் அவருக்கு நடிப்பதற்குக்காட்சி இன்னும் வரவில்லை. 'இன்னும் மேக்அப் போடவில்லையே, இப்பொழுதே மணி 12 ஆகிவிட்டதே' என்றார். இப்படி இவர் சொல்லி முடிக்கு முன்பே ஏ.வி.எம். யூனிட்டைச் சேர்ந்த ஒருவர் ஓடி வந்து, உணவு இடைவேளைக்குப் பிறகு உங்கள் காட்சி இருக்கிறது. தயாராகுங்கள்' என்று கூறி விட்டுச் சென்றார்.

எஸ். பி. முத்துராமன் படப்பிடிப்பு என்றாலே, காரியம் சிறப்பாகவும், வேகமாகவும் நடக்கும். ஆனால் ஏ.வி.எம். தயாரிப்பு என்பதாலோ என்னவோ வேகமாக அல்ல அதிவேகமாகவே நடைபெற்றுக் கொண்டிருந்தது. டைரக்டரின் வேகத்துக்கு ஈடுகொடுத்து ஒளிப்பதிவாளர் பாபு பணியாற்றிக் கொண்டிருந்தார்.

திடீரென்று ரஜனிகாந்தைக் காணோம். சுற்றுமுற்றும் பார்த்தேன். ஓர் ஓரத்தில் நாலைந்து பெரிய மரங்கள் வெட்டப்பட்டுக் கிடந்தன. அந்த அடி மரங்களின் மீது அவர் ஆனந்தமாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். டன்லப் பில்லோவாகத் தோன்றியிருந்தால் வியப்பில்லை. அத்தனை களைப்பு!

ஏ.வி.எம். சரவணன் தயாரிப்பான 'முரட்டுக்காளை' உண்மையிலேயே புரட்சிப் படமாகத் தானிருக்கும் என்பது அதன் படப்பிடிப்பைப் பார்த்தாலே தெரிந்தது.

—சலன்



ரஜனிகாந்த், சுமலதா

# அரியக்குடி பற்றி அரிய தகவல்கள்!

தமிழக அரசியல்வானில் ஒரு அண்ணா இருந்தது போல் கர்நாடக சங்கீதவானில் ஒரு அண்ணா தன்னிகர் அற்று விளங்கினார். அவர் அரியக்குடி ராமானுஜஅய்யங்கார்தான். அவர் சிஷ்யர்கள் அவரை 'அண்ணா' என்றுதான் குறிப்பிடுகிறார்கள். அண்ணாவுக்குத் தம்பிகள் அண்மையில் விழா எடுத்தார்கள்.

''அந்த நாட்களில் சென்னையில் சங்கீத சபாக்களெல்லாம் குறைவு. ஏதாவது ஒரு சபை அரியக்குடி ஐயங்கார்வாள் கச்சேரி அடுத்த மாதம் இன்ன தேதியில் நடக்கும் என்று அறிவித்து விடுவார்கள். தொழில் நிமித்தம் அடிக்கடி வெளியூர்செல்ல வேண்டியிருக்கும் என் போன்றவர்கள் அரியக்குடியின் கச்சேரித் தேதியை அனுசரித்துத் தான் எங்கள் பயணத்திட்டங்களை அமைத்துக் கொள்வோம்'' என்றார் என்ஃபீல்டு கே. ஆர். சுந்தரம் ஐயர்.

திருநெல்வேலியில் அரியக்குடி அவர்களுக்கு கச்சேரி ஏற்பாடாகியிருந்தது. கச்சேரிக்கு அமர்த்தப்பட்டிருந்த பிரபல வயலின் வித்வானால் வர முடியவில்லை. உள்ளூர் பாகவதர் பணிவாக 'வயலின் டியூஷன் சொல்லிக் கொடுக்கும் ஆசாமி ஒருவர் இருக்கிறார். அவரை அழைத்து வரச் சொல்கிறேன். சரிப்படுமா என்று பாருங்கள்!' என்றார்.

அந்த டியூஷன் வாத்தியார் நடுங்கிக் கொண்டே வந்தார். அரியக்குடி அவர் பயத்தைப் புரிந்து கொண்டு உற்சாகமாக ''நீங்க பாட்டுக்கு வாசித்துக் கொண்டிருங்கள். பாட்டுக்கு வாசிக்கிறோமான்னு கவலையே படாதீர்கள். மற்றதை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்றார்.

அன்றைய கச்சேரி பிரமாதமாக அமைந்தது.

தம் சாமர்த்தியத்தால் பிரபல வயலின் வித்வான் வராத குறையே தெரியாமல் செய்து விட்டார் அரியக்குடி. ஆனால் இந்த டியூஷன் வயலின்காரரோ தாம் அப்போப்பட்ட அரியக்குடிக்கே பக்கவாத்தியம் வாசித்ததைப் பெருமையாகப் பல ஆண்டுகளுக்குக் கூறிக் கொண்டிருந்தார்.

-எத்தகைய பக்க வாத்தியக்காரரையும் ஊக்குவித்தும் அனுசரித்துப்போயும் வெற்றி காணும் வீரர் அரியக்குடி என்பதைக் குறிப்பிடும் வகையில் எம்பார் விஜயராகவாச்சாரியார் கொடுத்த தகவல் இது.

''என்குருநாதர் இன்னும் கொஞ்சம் பாட மாட்டாரா என்று எதிர்பார்க்கும்போது சட்டென்று கச்சேரியை முடித்து ரசிகர்களைப் பிரமிக்க வைப்பார். அவர் சிஷ்யனான நான் எப்போது பேசி முடிப்பேன் என்று நினைக்க வைக்கக் கூடாது'' என்று சொல்லி, குரு பக்திக்கு சமர்ப்பணமாகத் தம் பேச்சைச் சுருக்கமாக முடித்துக் கொண்டார் பாலக்காடு கே. வி. நாராயணசாமி.

எல்லோருமே ரத்தினச் சுருக்கமாய் பேசியதற்கு டி. வி. எஸ். நிறுவனத்தின் அதிபர் ரத்தினம் விழாவுக்குத் தலைமை வகித்தது காரணமாயிருக்கலாம்!

— சோமதி ஸ்வாமிநாதன்





# கடலுக்குள் ஜூலி

புஷ்பா தங்கதுரை

Courage my hearts for a fresh charge — Captain Smith (1627)

## 22

பால்மர்ஸன் சீக்கிரம் ஜூலியின் இருப்பிடத்தைக் குறிக்க விழைந்தார்.

கைப்பெட்டியிலிருந்து நீளக் காகிதத்தை எடுத்தார். இழே விரித்தார்.

நல்லவேளை புறாவும் மழையும் முற்றிலும் நின்று விட்டிருந்தன.

காகிதத்தில் சிரமப்பட்டுக் கோடுகளையும், குறிப்புகளையும் வரைந்தார்.

பிறகு Here lives JulieaGlante என்று கொட்டையாக எழுதினார்.

அந்தச் சார்ட்டை முடித்ததும் தனியே ஒரு கடிதம் எழுதினார்.

ஆண்டவனின் பெயரைச் சொல்லி இரண்டையும் கண்களில் ஒத்திக் கொண்டார்.

ஒரு காலி பாட்டிலை எடுத்து அதனுள் கடிதத்தை நுழைத்தார்.

பிறகு சார்ட்டையும் அதனுள் நுழைக்க முயல, அது உள்ளே போக மறுத்தது.

மீண்டும் அவர் தம் பெட்டியைத் திறந்து மற்றொரு காலி புட்டியை எடுத்தார்.

(அந் நாளில் கடல் பயணத்தில் எதிர்பாராத ஆபத்து நேரிடும் என்பதற்காக, மாலுமிகள் எடுத்துச் சென்ற உபகரணங்களில் காலி புட்டியும் ஒன்று.)

சார்ட்டை இரண்டாம் காலி புட்டியில் செலுத்தினார்.

இரண்டையும் கார்க் போட்டு அடைத்தார்.

அவைகளையும் தோத்திரம் செய்து முத்தமிட்டார்.

இரண்டையும் சேர்த்து ஒன்றாகக் கட்டினார்.

தம் பக்கத்தில் மண்ணில் தெரிந்தும் தெரியாமலும் புதைத்து வைத்தார்.

பிறகு ஒரு மணி நேரத்தில் ஆயாசம் மிகுந்து வர, கண்களை மெதுவாக மூடினார்.

அதுவே அவரது மீளா உறக்கமாகப் போய்விட்டது.

பால்மர்ஸனின் கதை அந்தக் கனிநாகலாபுரத்தின் கரையில் முடிந்து விட்டது.

நிசப்தம் நிலவ, மல்லிக் கல் ஆனான்.

—மிஸ்டர் ராம்சந்த்! என்றாள் சம்பகா, —ரொம்ப அதைரியப் படுத்துறீங்க!

ராம்சந்த் வெய்ட் பெல்டைக் கழற்றி அக்வாலங்கைத் தூர வைத்தான். — நீ சொல்றது சரி சம்பகா! அதைரியம் உண்டாக்க விரும்பலே! ஆனா நான் என்ன செய்ய முடியும்! எல்லா முயற்சியும் செஞ்சாச்சு. நம்ப சக்திக்கு மேலயே செஞ்சாச்சு. ஜூலி கிடைக்கலே. இனிமே.....

எழுந்தான்.

சம்பகாவின் முகம் கறுத்தது. கடலை நோக்கித் திரும்பினாள். பரந்த நீல வெளி. அலைகளின் எண்ணிலா மடிப்புகள்.

தூரத்தில் இரண்டு கொத்து குமுலஸ் மேகங்கள்.

திரும்பும் போது கண்களில் இரண்டு முத்துக்கள்.

அதை ராம்சந்திடம் காண்பிக்க விரும்பாமல் மெள்ள நழுவி காபினுக்குள் போனாள்.

திரும்பவும் அழுகை.

கைக்குட்டையைப் புதைத்துச் சிறிது விம்மினாள்.

அவளைப் பொறுத்தவரை ஜூலி உயிருள்ள ஜீவன். அதை அடிக்கடி நினைத்து, அதைப் பற்றியே பேசியதில் அதனுடன் ஒரு சிநேக பாவம் வளர்ந்து விட்டது. ஒரு அசப்பில் ஜூலி அவளது தோழி போல் தோன்றினாள். கடலுக்குள் அவள் விடுதலை இல்லாமல் இருக்கிறாள். அவளை வெளியேற்றி .....

ராம்சந்த் காபினுக்குள் வந்த போது சம்பகா அந்தச் சார்ட்டில் பார்வையைப் பெய்து கொண்டிருந்தாள்.

ஜூலியைத் தேடிய இடங்களை எல்லாம் ராம்சந்த் அதில் குறித்திருந்தான்.

—ஓ! என்று ஆச்சரியப்பட்டு அவள் அருகில் வந்தான் ராம்சந்த். — பார் சம்பகா அங்கும் அங்கும் பத்து சதுர மைல் பார்த்தாச்சு. நுணுக்கமாகப் பார்த்தாச்சு. எதுவும் கிடைக்கலே!

மல்லிக்கும் அப்போது உள்ளே வந்தான்.

அவன் நிழல் கண்டு இருவரும் திரும்பி னார்கள். இவன் யார் மல்லிக்கா? நோயில் விழுந்தவன் போல் பாதி ஆகி யிருந்தான். சில மணி நேரங்களுக்குள்.

—மல்லிக்! உன் துக்கம் எனக்குப் புரிகிறது? நாம் என்ன செய்ய முடியும்?

ராம்சந்த் . மன்னிப்புக் கேட்பது போல் பேசினான். அவனுக்கும் துயரம் தோன்றி இருந்தது. மூன்று பேரும் சிறிது நேரம் பேசவில்லை.

—ராம்சந்த்! இன்னும்கொஞ்சம் கிழக்காலே தேடினால் என்ன? என்றாள் சம்பகா.

—இவ்வளவு தூரம் கிழக்க வந்தாச்சு.. இனியும் போய்க்கிட்டே இருக்க முடியுமா!

—அப்போ ஜூலி எங்கேதா ன்போ யிருப்பா?

—மண் மூடி இருக்கும்.

—மண்?

—ஆமாம்; தூசியும் மண்ணும் இந்த 140 வருடத்திலே அவளை மூடி இருக்கும்.

—நிச்சயம் நம்பறீங்களா!

—நிச்சயமாகத்தான் சம்பகா. இல்லாட்டி ஒரு சின்னத் தடயமாவது கிடைச்சிருக்கும். உன்னோ தரை வழுவழுன்னு எந்தவித வித்தி யாசமும் இல்லாம ஒரே சீராக இருக்கு. மருந்துக்கு ஒரு மாறுதல் இருக்கணுமே? ஊஹூம்.

மல்லிக் நெஞ்சிலிருந்து இடைவிடாத விக்கல். இருவரும் பார்க்க அவன் கண்களில் நீர்.

—ராம்சந்த்! என்றான் துக்கமுடன் —மண் ணைக் கிளறிப் பார்க்க முடியுமா!

ராம்சந்த்துக்கு விரக்திப் புன்னகை. —அது முடியுமா மல்லிக்! நம்ப கிட்ட அதுக்கு எக்விப்மெண்ட் இல்லே! அப்புறம் அது எவ் வளவு கஷ்டமான வேலே!

காபினில் ராம்சந்த் உட்கார்ந்து விசை களைத் தட்டிய போது,

ரூபாவின் அடி வயிற்றில் மெல்லிதாகச் சலனம் எழுந்தது. அவளது அடித்தளத்தின் மேசல் எஞ்சின் துரூராக உதம்பியது.

விஞ்ச் ஸ்விட்ச் போட, தங்கரத்தின் நீண்ட சங்கிலிகள் கடலுக்குள்ளிருந்து மெள்ள எழும்பி வந்து வரி வரியாக விஞ்சில் படிந்து கொண்டன.

காம்பனைப் பார்த்துப் பிடிகளை இழுக்க ரூபா மெள்ள அன்னம் போல் திரும்பினாள்.

சம்பகா அடுத்த அறையுள் நுழைந்தாள். கண்களில் மழை! கண்ணாடி வழியே வெளியே பார்க்க கடல் பெரிய விஸ்தாரமாக மெள்ள ஆடியது. அந்தக் கடலையும் அந்த இடத்தை யும் விட்டுப் போகவே மனம் எவ்வளவு வெதும்புகிறது!

மல்லிக் தன் உடமைகளை எடுத்துக் கொண் டிருந்தான். மேலே கப்–போர்டிலிருந்து கம்பளி, போர்வை, பெட்ஷீட், பாண்ட், ஷர்ட்கள் எல்லாம் எடுத்து லெதர்ப் பையில் சொருகும் போது,

பளிங் என்று சத்தம்.

சம்பகா திரும்பிப் பார்த்தாள்.

பிறகு ஒரு சின்னத்தனமான ஆவலுடன் கீழே இறங்கி வந்து பார்க்க மேலே கப்-போர்டிலிருந்து அந்த கான்வாஸ் பை விழுந் திருந்தது.

முக்குளிப்பின் போது அவன் எடுத்துச் சென்றிருந்த பை.

அதை எடுத்தாள். உள்ளே உலோக சப்தத்தை ஏற்படுத்திய* பொருள் துருத்திக் கொண்டு இருந்தது.

வெளியே அதை எடுத்தாள். கையில் வைத்துப் பார்க்க, களிம்பு ஏறிய தட்டு. வெள்ளித்தட்டு. அதை எடுக்கப் போய்த்தான் அவன் கடலுக்குள் மாட்டிக் கொண்டது.

விரைவாக விளக்கடிக்குப் போய் அதைச் சோதித்தாள்.

நெளிவுகள் நிறைய உள்ள விளிம்பு. உள்ளே மங்கிய பூவேலை. இடியாத தட்டு. வெள்ளித் தட்டு.

பரபரப்புடன் மேலும் ஆராய, ஒரு கணம் குபீர் என்று எழுந்து — மல்லிக் என்று கத்தி னாள்.

மல்லிக் திடுக்கிட்டான்.

—இங்கே வாங்க மல்லிக்!

மல்லிக் ஓடி வந்தான்.

—இதைப் பார்த்தீங்களா?

—தட்டு! இது ஏது?

—நான் முக்குளிச்ச எடுத்துட்டு வரல்லே!

—ஓ, மைகாட்! இதை அப்படியே போட்டு வச்சுட்டோம். உன் ஜுரத்தைக் கவனிக்கும் அவசரத்திலே கவனிக்கவேயில்லே.

—இதிலே என்ன எழுதியிருக்கு, பாருங்க மல்லிக்!

பார்த்தான்.

கண்கள் கொப்பளித்தன.

—சம்பகா, என்று ஒரு துள்ளுத் துள்ளினான். ஸ்டீயரிங் கை இடித்தது. முகத்தில் ஆனந் தம் அளவு கொள்ளவில்லை. பழைய ஜீவன் துள்ளி வந்திருந்தது.

—சம்பகா! இதைப் பார்த்தியா! ......

Birthday present to L. Eston Esq., From Edward M. Palmerson, Captain Julie Galante.

சம்பகா விருட்டென்று எழுந்தாள். இரு வரும் சேர்ந்து காபினுக்குள் பிறினார்கள்.

தட்டைப் பார்த்ததும் ராம்சந்த் திக்குமுக் காடினான். படகை உடனே நிறுத்தினான். பரபரப்புடன் எழுந்தான்.



"ஓட்டுப் போடும்போது தபாலின் முத்திரை குத்துகிற நினைவு வந்து தொலைச்சிடுது சார்!"
"அதனால என்ன இப்போ?"
"ஓட்டுச் சீட்டில் இருந்த எல்லா சின்னத்தின் பேரிலும் குத்திட்டேன்...."

—இது எங்கே கிடைச்சது?

—தண்ணிக்குள்ளே நான் போனேனே, உள்ளே மாட்டிக்கிடல்லே? என்று நினைவுப் படுத்தினுள் சம்பகா.

—ஆமாம், இதை யாரும் முன்னுலேயே பார்க்கலையா?

—சம்பகாவுக்கு உடம்பு சரியில்லாத அவசரத்திலே எதையுமே கவனிக்கலே! இந்தக் கான்வஸ் பையை கப்-போர்டிலே நான்தான் தூக்கி எறிஞ்சேன். உள்ளே எதுவோ இருக்குன்னு கூட யோசிக்கல்லே!

சம்பகா இடை மறித்தாள். — நீங்க ரெண்டு பேரும் தட்டைப் பார்த்திருப்பீங்கன்னு நினைச்சுட்டேன்! பார்த்திருக்க வேண்டாமா? என்று ஆதங்கத்துடன் கேட்டாள் அவள்.

ராம்சந்த் ஒரு விநாடியில் அந்த இடத்தின் ஆழத்தைக் கண்டு பிடித்து, தங்கரத்தைப் பாய்ச்சினுன்.

பிறகு, சம்பகாவை உட்காரச் சொல்லி, அவளிடம் அந்த முக்குளிப்பு பற்றிய விவரங்கள் முழுவதையும் கேட்டான்.

அவன் கடலுள் போனது, சட்டம் போட்ட அமைப்பில் மாட்டிக் கொண்டது. உள்ளே அந்தத் தட்டு மின்னியது, அதை எடுக்கப் போய் வகையாக மாட்டிக் கொண்டது, தட்டை எடுத்த பிறகு நினைவு இழந்தது, எல்லாம் கூறினுள் அவள்.

ராம்சந்த் யோசனையில் ஆழ்ந்தான். —இது காப்டன் பாம்மர்ஸன் எஸ்டனுக்குக் கொடுத்த பரிசு இல்லையா?

—ஆமாம் என்றுன் மல்லிக்.

—எஸ்டன் யாரு?

—ஜூலியிலே டெபுடி கேப்டன்.

—அப்போ நீ பார்த்த உடைசல்தான் ஜூலியா?

—அப்படித்தான் இருக்கும்; என்று பெருமிதத்தில் சொன்னுள் சம்பகா!

—எவ்வளவு உயரம் இருந்தது? எவ்வளவு அகலம்.

—உயரம் எட்டு பத்தடி இருக்கும்! அகலம் அதிகமில்லே.

—படகு சைஸ்தான் என்றுன் மல்லிக்.

—ஓ! என்று சொல்லி ராம்சந்த் யோசித்தான். இரண்டு நிமிடத்தில் பளிச்சென்று நிமிர்ந்தான்.

—மல்லிக்! அந்த இடிபாடு என்ன தெரியுமா!

—சொல்லுங்க!

—ஜூலி மூழ்கின போது எஸ்டன் ஒரு படகிலே தப்பிக்கப் பார்த்திருக்கான். ஆனு அலையிலே அகப்பட்டுப் படகு மூழ்கியிருக்கணும்.

மல்லிக் பிரகாசித்தான்.

—யு ஆர் ரைட் ராம்சந்த்!

-என் தியரி சரின்னு ஜூலி அந்தப்படகுக்கு நிச்சயம் கிழக்கிலேதான் மூழ்கி இருக்கணும்.

—எப்படிச் சொல்றீங்க'

—ஜூலி மூழ்கும் போது படகிலே யாராவது கிளம்பின மேற்கேதான் போவாங்க! மேற்கேதான் கரையிருக்கு. அதனுலே படகு இருந்த இடத்துக்குக் கிழக்காலதான் ஜூலி இருக்கணும்.

—கிரேட்.



## கோடை கொளுத்தாதது வெய்யில் வதைக்காது!

''ஜிமிக்கி இப்போது 'அவுட் ஆப் ஃபாஷன்' அல்ல; அதுதான் இன்று ரொம்ப பாபுலர்'' என்று வாதாடுகிறர் மேலட்டையில் காட்சி தரும் **மேனகா**.

''ஃபாஷன் மாறி எந்த நகை மவுசு இழந்தால் என்ன, பெற்றுல் என்ன? புன்னகை மட்டும் என்றும் தன் மதிப்பிழக்காது'' என்கிறேும் நாம். ''ஆனல் ஒன்று, அது அலட்சியப் புன்னகையாயிராமல் அன்புப் புன்னகையாக மலர வேண்டும்!''

''அத்தகைய புன்னகைக்குச் சென்னையின் வரலாறு காணுத 112 டிகிரி வெய்யிலைக் கூட மறந்து விடச் செய்யும் ஆற்றல் உண்டு'' என்கிறர்—

வண்ணப்படம் எடுத்த **ராதிகா**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

மேலும் இரண்டு நிமிடம் ராம்சந்த் யோசிப்பு.

—இப்போ நாம்ப திரும்பறேம். மறுபடியும் தேட ஆரம்பிக்கிறேம்.

சம்பகாவும் மல்லிக்கும் பொத்துக்கொண்டு புன்னகை யிட்டார்கள்.

ரூபா மென்ன ஒரு நீர்ப்பறவை போல் வட்டமிட்டுத் திரும்பினுள்.

**ம**றுநாள் தேடல் ஆரம்பித்தது.

ராம்சந்த் அதிகமாக எக்கோ ஸவுண்டரையும் அல்டிக்கையும் உபயோகித்தான்.

கிழக்கால் சென்றபோது ஆழம் நூறு அடியை எட்டியிருந்தது.

ஒருவாரம் முழுதும் முதல் முயற்சியைத் தொடர்ந்ததில் பலன் ஏதும் கிடைக்கவில்லை.

அது அவர்களுக்குச் சோர்வை அளித்தது.

ஆனல் ராம்சந்த் தளரவில்லை.

அவனுடைய யோசனையில் ஜூலியின் இடிபாடு லேசாக மணலில் புதைந்திருக்கும் என்று உறுதியாகத் தோன்றியது.

ஒன்று: தண்ணீருக்குள் மூழ்கி அதைக் கண்டு பிடிக்க வேண்டும்.

அல்லது....

அந்த இரண்டாவது வழி அவன் மனத்தில் உடனே ஜனித்து விட்டது.

கடல்தரையை அடி அடியாகப் பெருக்க நினைத்தான் அவன்.

அரை பர்லாங் தூரத்தில் இரு படகுகளை நிறுத்தி நடுவில் நீளமான கேபிளைத் தொங்க விட்டு கடல் ஆழத்தில் அதை அமிழ்த்தி இரு படகுகளை மெல்ல நகரச் செய்வதன் மூலம் தரையை கேபிள் உதவியால் அப்படியே பெருக்கிவிட வேண்டும்.

உடனே காரியங்கள் மளமள என்று நடந்தன. இரண்டாம் படகை ஒரு வாரத்தில் வரவழைத்தான்.

அந்தப் படகு மல்லிக்கின் நண்பன் கோபியையும் அழைத்து வந்தது.

நண்பர்களும் ராம்சந்த்தும் கூடி யோசித்து ஒரு பிரும்மாண்ட தேடலுக்குத் தயார் ஆனார்கள்.

ராம்சந்த்துக்கு வெறியே பிடித்திருந்தது.

ஒவ்வொரு நாளும் கடலின் அடியைக் கேபிள் புரட்டிக் கொண்டே வந்தது. சின்னத் தடங்கல் தெரிந்தால்கூட உடனே முக்குளித்து காரணத்தைத் தெரிந்து கொண்டான் ராம்சந்த். தேடிய பகுதிகளைக் குறிக்கும் வண்ணம் இரும்பு மிதப்புகளைநீரில் மிதக்கவிட்டார்கள்.

அந்த மிதப்புகள் கடலில் ஒரு ரன்வே போல் புள்ளிகளாகத் தெரிந்தன.

ஒவ்வொரு மிதப்பும் நீளச் சங்கிலியில் பிணைக்கப்பட்டுக் கீழே சின்ன கனமான இரும்புக்குண்டோடு கோக்கப் பட்டிருந்தது.

Buoyகள் மிதப்பன போல் இவை மிதந்தன.

இந்த மிதப்புப் புள்ளிகளைக் கவனித்துக் கொண்டு ஒரு இடத்தை இருமுறை தேடாமல் மேலே மேலே தேடிக்கொண்டே போக, மேலும் இரு வாரங்கள் ஓடி விட்டன.

அநேகமாக எல்லாருக்கும் களைப்பு ஏற்பட்டது. முயற்சிகள் மீது ஒரு அவநம்பிக்கை ஏற்பட்டது.

நம்பிக்கை சிறிதும் குறையாமல் இருந்த ஜீவன்கள் மல்லிக்கும் சம்பகாவுந் தான்.

ஒருவரை ஒருவர் உற்சாகப்படுத்தி, ராம்சந்த்தையும் அவர்கள் உற்சாகப்படுத்தினார்கள்.

இருபது நாள் சென்றதும் கோபி மிகவும் அலுத்துப் போனான்.

—மல்லிக்! கடைசியில் இவ்வளவு செலவு பண்ணியும் நமக்கு....

—மூடு கோபி! அபஸ்வரம் போடாதே. ராம்சந்த் ரொம்ப தீவிரத்திலே இருக்கான். கண்டு பிடிக்காம விடப்போறதில்லே.

முதல் ஸ்டேஜ் முடிந்ததும், எல்லோரும் பூந்தளம் ஊரில் இரண்டு நாள் ரெஸ்ட் எடுத்தார்கள்.

படகுகளையும் ஒழுங்குபடுத்தி, மேலும் உபகரணங்களையும் சேர்த்துக் கொண்டு, இரு வாரத்துக்கான கடல் பயணத்தில் கிளம்பினார்கள்.

கடல் வெளியை அடைந்து முதல் முறை கேபிளைக் கீழே விட்டவுடன் அது அறுந்தது. ராம்சந்த்துக்கு ஆத்திரமாக இருந்தது.

மீண்டும் இரு படகுகளை ஒன்று சேர்த்துத் தான் கேபிளை ஒக்கிட முடியும்.

அதை நினைக்கும் போது, அந்தக் கடல் வெளிப் பாதையில் கடைசியாக நிறுத்தியிருந்த மிதப்பு எங்கே?

அதைக் காணவில்லை.

அறுத்துக் கொண்டு ஓடி விட்டிருந்தது.

எங்கே போயிருக்கும்?

ராம்சந்த் அதை விட்டுவிட மனம் இல்லாமல்,

பைனகுலர்ஸ் மூலம் பார்க்க, கிட்டத்தட்ட அரை மைல் தாண்டி அந்த மிதப்பு தெரிவது போலிருந்தது.

—அதைப் போய் இழுத்துட்டு வருவோம், என்றான் ராம்சந்த்.

—வேண்டாம் ராம்சந்த்! விட்டுடலாம், என்றான் மல்லிக்.

—நோ நோ! நம்ப பொருள் ஒரு தரும் பைக்கூட விட்டுடக் கூடாது! இழுத்துட்டு வருவோம்.

படகு அதை நோக்கிச் சென்றது.

அரை மைலில் தென்பட்ட... அது அவர்களது மிதப்புத்தான்.

கீழே உள்ள குண்டை அறுத்துக் கொண்டு அது பிரயாணித்திருந்தது.!

ராம்சந்த் படகை அதன் அருகில் நிறுத்திச் சங்கிலியால் கொக்கி மாட்டி இழுக்க,

என்ன இது?

அது எளிதாக வரவில்லை.

சங்கிலியின் பலம் கூடியது.

இழுக்க இழுக்க வர மறுத்தது மிதப்பு!

அதைப் பார்த்த ராம்சந்த்துக்கு அதிசயம் கூடியது.

ஓடிப் போய் எக்கோ ஸவுண்டரில் ஆழம் பார்க்க,

அது முப்பதடி உயரத்தில் பெரிய மேடு இருப்பதைக் காட்டியது.

ஜூலியா அது?

உள்ளே படுத்திருக்கிறாளா?

பக்கவாட்டத்தில் சாய்ந்திருக்கிறாளா?

(தொடரும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## சினிமினி



சமீபத்தில் • மூக்குக் குத்திக் கொண்டார் லதா, ரொம்ப நாளைக்கு முன்பு செய்து வைத்திருந்த ஒரு வைர மூக்குத்தியைப் போட்டுக் கொள்ள. ரொம்பவும் தான் வலிக்கிறது என்றார்.

●



காலையில் எதை வேண்டுமானாலும் மறப்பார் நடிகர் கமல். ஆனால் உடற்பயிற்சியை மட்டும் மறக்கமாட்டார். எல்லாவிதமான உடற்பயிற்சி சாதனங்களும் இவர் வீட்டிலிருக்கின்றன என்று சொல்ல முடியாவிட்டாலும் ஒவ்வொன்றாக இப்பொழுது சேர்க்க ஆரம்பித்திருக்கிறார்! இவர் வீட்டில் நுழைந்தவுடன் காட்சி தருவது ஷீரடி சாய்பாபாவின் சிலை. அதனடியில் இவரது முதல் படமான 'நீச்சல் குள'த்தில் இவர் பேசிய முதல் வசனத்தை எழுதி வைத்திருக்கிறார்!

தகவல்: குமார்

# நட்சத்திர வடிவம் பரிசுத் திட்டம்-6

இங்கு உள்ள துண்டங்களை ஜாக்கிரதையாக ஓரத்தையொட்டிக் கத்தரிக்கவும். அவற்றை மேலும் பின்னப்படுத்தக் கூடாது. ஒரு வெள்ளைத் தாளில் இணை சேர்த்து ஒட்டித் திரைப்பட நட்சத்திரத்தின் உருவை முழுமையாக நீள்சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக்கும் தலா ரூ. 25 பரிசு உண்டு. தவிர அந்தத் திரைப்பட நட்சத்திரத்தின் கையெழுத்துடன் கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப்படும். முடிவு தேதியான ஜூன் 16 தேதிக்குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப்படும். உறையின் மேல் ''நட்சத்திர வடிவம் - 6 என்று குறிப்பிடவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளிவாக, ஒட்டப்பட்ட படத்தின் கீழே குறிப்பிட மறவாதீர்கள்!

- ஆசிரியர் கல்கி, சென்னை-32

# மழைப் பட்டாளங்கள்

படவிமர்சனம்



**கௌ**ரி மனோகரி என்ற எழுத்தாளரைக் காணாமலே காதல் கொண்டுவிடுகிறாள் ஒரு பெண். அவரை நேரில் காண அவள் செய்யும் முயற்சிகளும் அப்பொழுது ஏற்பட்ட தோல்விகளும் மிகவும் சுவையானவை.

ஆறு குழந்தைகளுக்குத் தந்தையான அந்த எழுத்தாளருக்கும் ஐந்து குழந்தைகளுக்குத் தாயாகக் கூறிக் கொள்ளும் அந்தப் பெண்ணுக்கும் திருமணம் நடந்து விடுகிறது. திருமணத்துக்குப் பின் தனிக்குடித்தனம் தொடங்கும் புதுமணத் தம்பதிக்குப் புதிய பிரச்னை தோன்றுகிறது. அதுதான் குழந்தைகள்! அவர்களுக்குத் தங்கள் திருமணம் பற்றி எப்படிக் கூறுவது என்று இருவருக்கும் பயம்! இருவரும் குழந்தைகளைச் சமாளிக்கும் விதம் குழந்தைகள் இவர்களைச் சமாளிக்கும் விதம் எல்லாமே ஒரே வேடிக்கை!

காதலர்களை மணமக்களாக்கும் சுந்தரி பாய் இப்படத்தில் தனி இடத்தைப் பெற்று விடுகிறார். அவ்வளவு இயல்பான பேச்சு.

சுமித்ரா தன் காதலருக்கு டெலிபோன் செய்வதிலேயிருந்து ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் குதூகலமும் சிரிப்பும் கொந்தளிக்க அற்புதமாக நடிக்கிறார்.

தன் அக்காளுக்கும் அவள் புருஷனுக்கும் ஏற்பட்ட விபத்தும் இருவரும் ஒரே சமயத்தில் இறந்து விட்ட அதிர்ச்சியும் கல்யாணமாகாமலே அக்காளின் ஐந்து குழந்தைகளுக்கும் தாயாக நேர்ந்த விபரீதமும் 'ஃப்ளாஷ் பாக்' உத்தியில் சொல்லப்படுகிறது. ஆனால் அது ஏனோ சரியாகக் 'கிளிக்'காகவில்லை.

கன்னட நடிகர் விஷ்ணு வர்த்தன் கதா நாயகனாக நடிப்பதற்கு ஏற்ற படந்தான் இது. ஆறு குழந்தைகளின் தந்தையாகத் தானே வருகிறார்!

தோல்வியடைய இருந்த ஒரு காதல் திருமணத்தைக் குழந்தைகளே தலையிட்டு நடத்தி வைப்பது அதிகப் பிரசங்கித்தனமாகத் தோன்றினாலும் ரஸமாகவே இருக்கிறது.

படத்தின் திரைக்கதையையும் உரையாடல்களையும் எழுதியிருப்பவர் விசு.

கே. பாலசந்தரின் மேற்பார்வை படத்தின் தனிச் சிறப்பு. திரைக்கதையின் ஆதாரம் ஹிந்தி; அதற்கு ஆதாரம் ஒரு டர்க்கிஷ் படம் என்று சொல்லப்படுகிறது. அதற்கு எது ஆதாரமோ எப்படியோ போகட்டும். படம் சுவையாயிருக்கிறதே!

எழுத்தாளரும் சுமித்ராவும் சந்திக்கும் போது அவர் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி பற்றிப் பேசி அறுப்பதைக் கேலி செய்ய, மரத்தை ரம்பம் போட்டு அறுப்பதைக் காட்டுவது ரசிகர்களின் கையொலியைப் பெறுகிறது.

இயக்குனராக அறிமுகம் ஆகும் லக்ஷ்மியின் டைரக்ஷன் முழுமை பெறவில்லை; அனுபவ முதிர்ச்சி தெரிகிறது.

**-காந்தன்**

---

# ஏற்றதோர் தலைவன் வரவேண்டும்

நெல்லை ஆ. கணபதி



தேர்தலில் எத்தகையவர்கள் வென்று நம்மை ஆள வரவேண்டும்? - அமெரிக்கக் கவிஞர் ஜோசையா கில்பர்ட் ஹாலண்ட் கூற, நெல்லை ஆ. கணபதி மொழி பெயர்த்து அளிக்கிறார்.

எல்லாம் வல்ல ஆண்டவனே!
இறைவா! கருணை நிறைந்தவனே!
பொல்லா இருளில் இருந்தெங்கள்
புனித பூமி நலம் பெறவே
நல்லோன் எங்கள் தேவையினை
நல்கும் ஒருவன் சேவையினை
வல்லோன் நீதான் அறிவாயே!
வரம்தான் தந்தே அருள்வாயே!

தூய்மையின் வடிவம் தோற்றமதாய்த்
துணிவுடன் உறுதியும் நெஞ்சமதாய்
வாய்மையும் நம்பிக் கையதுவும்
வந்தவர்க் குதவிடும் கையிரண்டாய்க்
காய்தலும் உவத்தலும் இலாதவனாய்க்
கடமையே செய்திடும் நல்லவனாய்ப்
பேயனும் லஞ்சம் நெருங்கிடாத
பிறவியாம் ஒருவனைத் தந்திடுவாய்!

கோஷமே போடுதல் ஊரெல்லாம்
கூட்டியே மயக்கிடும் சொற்ஜாலம்!
மோசமே செய்து சுயநலத்தை
மூடியே மறைத்தல்! இவையின்றித்
தேசமே சேவையாய் லட்சியமாய்த்
திகழ்ந்திடும் கருத்துடன் பொதுநலமும்
வேஷமே போடுதல் அறியாத
விவேகமும் கொண்டவன் தருவாயே!

எங்கள் பசிக்கோ உணவாக
இனிமையாய்ப் பசப்பிடும் மொழிவேண்டாம்!
பொங்கும் உணர்வைக் கண்டவுடன்
போட்டிடும் நாடகம் இனி வேண்டாம்!
தங்களின் இதய சக்தியுடன்
தர்மமே காத்திடும் பக்தியுடன்
இங்கே இன்றே இப்பொழுதே
ஏற்றதோர் தலைவன் வரவேண்டும்!




⌘ பொன்னுதுரை, செங்கற்பட்டு
கே. தாங்கள் பாராட்டும் சேவை என்ன?
ப: செங்கற்பட்டுக்கு அருகில் ஒரு மத்திய தொழு நோய் மருத்துவ மனை இருக்கிறது. அதை ஒட்டி, ஒரு அன்புத் தொண்டு நிலையம் என்ற காவனியை அமைத்து ஒரு மனிதர் அபாரப் பணி செய்கிறார். அவரும் ஒரு நோயாளிதான். ஆனால் மனத்தால் மிக்க ஆரோக்கியமானவர். சுவாமி சுந்தரபாரதி என்கிற தமிழ்ப் புலவர் (பார்வை இழந்தவர்) நோயாளிகளின் சேவையில் அற்புதமாக ஈடுபட்டு இருக்கிறார். தமக்குக் கிடைக்கும் தமிழக அரசின் உதவித் தொகையையும்—புலவருக்கான உதவிப் பணம் — பல அயல் நாட்டு, இந்திய அன்பர்களின் நன்கொடையையும் இந்தத் தொண்டு நிலைய பராமரிப்பில் செலவழிக்கிறார். சுந்தரபாரதியின் சேவை பாராட்டுக்குரியது. அத்துடன் செல்வந்தர்களின் ஆதரவிற்கும் உரியது.

⌘ சுதா மணிமேகலை, வேலூர்
கே. "வெங்காயம் சுக்கானால்..." என்று துவங்கும் பாடலில் கவி காளமேகம் கடுகைக் குறிப்பிடவில்லையே, உங்களுடன் சண்டையா?
ப: காளமேகத்தை விடுங்கள். அழகிய சொக்கநாத பிள்ளை என்கிறவர், பலசரக்குப் பெயர் வரப் பாடியுள்ளார். அரிசி, வசம்பு, நாடன், சாம்பிராணி, கொள்ளது வரை, கடலை, சுக்கு அதிமதுரம், சீரகம், மிளகு, பாக்கு, கடுகு, காயம் எல்லாம் வருகின்றன. எல்லா வார்த்தைகளும் சிலேடையாக வருகின்றன. "பலசரக்குப் பையெடுத்தான்...." என்ற இப்பாடலை யாராவது தமிழாசிரியரைக் கேட்டால் சொல்வார்கள்.

⌘ சக்தி ப. குணசேகரன், வேலூர்-4
கே. நடிகை ஷோபாவின் மரணம் பற்றி?
ப: தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்கிறார்கள். புகழின் உச்சியில் செல்வத்தின் வசதியில் உள்ள ஒரு பெண் — ஒளிமயமான நீண்ட எதிர்காலத்தில் காலடி வைத்துள்ள ஒரு பெண் இப்படி இறக்கிறாள் என்றால் அவளது மனத்தில் எத்தனை எத்தனை இடிகள் தாக்கியிருக்க வேண்டும்? பரிதாபம்! பரிதாபம்!

⌘ எ. சுப்பிரமணியன், காரைக்குறிச்சி
கே. நாமிருவரும் சேர்ந்து கதை எழுதலாமா?
ப: எழுதலாம். அப்புறம் ஞானபீடப் பரிசு உங்களுக்கு வந்தால் பாதிப் பரிசையாவது எனக்குத் தர வேண்டியிருக்கும். ஆகவே நீங்கள் தனியாகவே எழுதித் தனியாகவே பரிசு பெற்றுக் கொள்ளுங்கள்.

⌘ மிஸ் சத்யா ரங்கநாதன், ஆர்க்காடு கிராமம்
கே. துன்பங்களுக்கு நடுவில் தவிக்கும் மனிதனைப் பற்றி...
ப: துன்பம் என்பது வாழ்க்கையின் ஒரு அம்சம். துன்பங்கள் இல்லாவிடில் மனிதன் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளவோ சீரமைத்துக் கொள்ளவோ முடியாது. காரணம், தானே கருங்கல்; தானே சிற்பியாக மனிதன் இருக்கிறான். துன்பம் என்னும் உளியால் பொளியப்பட்டால் தான் அவன் உருவடைய முடியும், உருப்படவும் முடியும்.

⌘ வாசு ராஜி, பம்பாய்-81
கே. அமரர் தேவன் நாவல்களில் உங்களுக்குப் பிடித்தது எது?
ப: எல்லாமே. அதில் 'லட்சுமி கடாட்சம்' கொஞ்சம் எக்ஸ்ட்ராவாகப் பிடிக்கும்.. தேவன் ஒரு அபூர்வக் கலைஞர், வலம்புரி சங்கைப் போல. (தேவனே ஒரு சமயம் என்னிடம் கூறினார், அவரிடம் வலம்புரிச் சங்கு ஒன்று இருப்பதாக.)

⌘ நடேஷ்கண்ணு, கணக்காடு
கே. உணர்வுக்கும் உணர்ச்சிக்கும் என்ன வித்தியாசம்?
ப: நமது ஐம்புலன்களுடன் சம்பந்தப்பட்டது உணர்வுகள். நமது நெஞ்சத்துடன் சம்பந்தப்பட்டது உணர்ச்சி.

⌘ எம். தேவராஜ், விழுப்புரம்
கே. அஸ்ஸாம் கலவரத்தைப் பற்றி ராஜாஜி உயிருடனிருந்தால் என்ன சொல்லி இருப்பார்?
ப: ராஜாஜியின் சிந்தனைத் திறமை எனக்கு இருந்தால் இதற்குப் பதில் சொல்லியிருப்பேன். நான் என்ன ஜூனியர் ராஜாஜியா?

⌘ சரஸ்வதி ராஜேந்திரன்
கே. கடுகையும் அரசையும் எப்படி ஒப்பிடலாம்?
ப: ஒப்பிடுவது கஷ்டம். கடுகு, விதை; அரசு, மரம்!

ரு 5. பரிசு பெறுபவர்

**பி. பொன்னுதுரை**
**எஸ். ஏ. எஸ். பள்ளி,**
**செங்கற்பட்டு**



# பாங்குகளில் என்ன நடக்கிறது?

ஆர். கிருஷ்ணன்

கல்கி 4-5-1980 இதழில் ''ஆறு பாங்குகள் அரசுடைமை'' என்ற கட்டுரையில் கே. ஸ்ரீனிவாஸன் பாங்குகளில் வாடிக்கையாளர்களின் அவல நிலையை எழுதிப் புலம்பியிருக்கிறார்.

ஒரு கையால் காசோலையைக் கொடுத்து உடனே மற்றொரு கையால் பணத்தைப் பெறுவதுதான் வாடிக்கையாளர் சேவை என்று பரவலாக ஓர் எண்ணம் நிலவுகிறது. சேவைக்கு அர்த்தம் இதுவல்ல. டெபாஸிட்டுக்களுக்குக் கவர்ச்சியான வட்டி விகிதம்; கடன்களுக்குக் குறைந்த பட்ச வட்டி விகிதம்; இதர சேவைகளுக்கு நியாயமான கட்டணங்கள்; இதுதான் உண்மையான வாடிக்கையாளர் சேவை. இந்த ரீதியில்தான் வாடிக்கையாளர்கள் வாயையும் வயிற்றையும் கட்டிச் சேமித்த பணத்திற்கு உண்மையான பிரதிபலன் (Return) கிடைக்கும். அப்படிப்பட்ட பிரதிபலன் ஏன் இப்போது பாங்குகளில் கிடைப்பதில்லை?

1974-ல் The working group on customer service மிகப் பெரிய அளவில் விளம்பரம் செய்து பொது மக்களிடமிருந்து பல கேள்விகளுக்குப்பதில்கள் பெற்று ஏன் வாடிக்கையாளர் சேவை தேசியமயமாக்கப்பட்ட பாங்குகளில் படுமோசமாக இருக்கிறது என்று இதோ பிட்டுப் பிட்டு வைத்திருக்கும் ஒரு சில காரணங்கள்:

(1) சக்திவாய்ந்த தொழிற் சங்கங்களின் ஆதிக்கம்

(2) தொழிலாளர்கள் உத்தியோகத்தில் முழுப் பாதுகாப்பு

(3) காலத்திற்கு ஒவ்வாத நன்னடத்தை விதிமுறைகள்

(4) வெகுமதி மற்றும் தண்டனை சம்பந்தப்பட்ட விதிமுறைகள் இல்லாமை

(5) தான் செய்யும் வேலை அதிகம் என்ற மனோபாவம்; எதிலும் அசிரத்தையான தொழிலாளிகளான் கண்ணோட்டம்.

ஒரு பாங்கினுள் நுழைந்து என்ன நடக்கிறது என்று பாருங்கள். கிளார்க்குகளுக்கும் பியூன்களுக்கும் சம்பள கிரேடுகளில் Efficiency Bar என்று ஒன்று கிடையாது. அரசாங்க அலுவலகங்களில் இருக்கும் Confidential character Rolls பாங்குகளில் இல்லை. ஒரு நாளைக்கு குறைந்தது இவ்வளவு வேலையாவது செய்ய வேண்டும் என்ற அளவுகோல் கிடையாது. கிளார்க்குகள் செய்யும் எந்தவிதமான வேலையையும் ஆபீஸர்கள் செக் செய்தே ஆக வேண்டும் என்ற விதிமுறைகள்; இதனால் கிளார்க்குகளுக்கு Accountablity கிடையாது. எங்கு பணம் புழங்குகிறதோ அங்கு ஒரே ஊழியரைத் தொடர்ந்து ஒரு குறிப்பிட்ட கால அளவிற்கு மேல் பணி செய்ய அனுமதிப்பது ஆபத்து என்பது அடிப்படை பாதுகாப்புச் சித்தாந்தம். ஆனால் பாங்குகளில் கிளார்க்குகளுக்கு மாற்றம் என்றால் தொழிற்சங்கத்தை முடுக்கி நாட்டையே ஸ்தம்பிக்கச் செய்து விடுவார்கள்.

கைநிறையச் சம்பளம். இதர சலுகைகள், வசதிகள் கேட்கவே வேண்டாம். நிறையக் கிளைகள் திறப்பதால் வேறு எங்கும் எதிர் பார்க்க முடியாத அளவிற்கு Promotion சந்தர்ப்பங்கள். அதுவும் மிகக் குறுகிய காலத்தில்! ஆனால் இன்றைய பாங்குக் கிளார்க்குகளின் மந்திரம் என்ன? பணியிலிருந்து சுதந்திரம்!

மேற்கூறியவைகளினால் விளைவுகள் என்ன? இதற்கு மேல் வேலை செய்ய எனக்கு அவகாச

---



## சினி மினி

தண்ணீர் என்றாலே எனக்குப் பயம். ரொம்ப நாட்களாக இந்தப் பயம் என்னுள்ளே இருந்தது. எப்படியாவது போக்க வேண்டுமென்பதற்காகத்தான் நீச்சல் கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். உட்லாண்ட்ஸில் ஆரம்பித்து ஏவேராவிலும் கற்றுக்கொண்டு இப்பொழுது கதர்ஸனில் நீந்தி வருகிறேன். 'தமிழ் நாட்டில் நீச்சல் கற்றுத்தர ஒரு பெண் பயிற்சியாளர்கூடவா கிடையாது?' என்கிறார் சங்கீதா. -தகவல்: அசோக்

மில்லை என்று கிளார்க் கூறிவிட்டால் ஆபீஸர் அதற்கு மேல் கேள்வி கேட்க முடியாது. என்னதான் வேலையில் தவறு செய்தாலும் ஆபீஸர்கள் தாங்களே அத்தவறுகளைத் திருத்துவதைத் தவிர கண்டிக்க வேறு வழியில்லை. தொழிற்சங்கத்திற்கு நடுங்காமல் அப்படிக் கண்டிக்க முற்பட்டால் ''நீ செக் செய்து திருத்துவதற்குத்தானே சம்பளம் வாங்குகிறாய்'' என்று கிளார்க் கூறிவிட்டால் அதற்குப் பதில் கிடையாது. ஓர் ஊழியர் மிக நன்றாக வேலை செய்கிறாரா? இன்னொருவர் மிக மோசமா? பாங்க் மானேஜர் இருவருக்குமே ஒன்றும் செய்ய இயலாத விதிமுறைகள். ''என்னை யார் தட்டிக் கேட்பது'' என்ற மனோபாவம் இந்தச் சூழ்நிலையில் யாருக்குத்தான் வராது? இதனால் தகடுதத்தங்களுக்குக் குறைவேயில்லாமல் போய் விட்டது. வேலை செய்யாமல் ஓவர்டைம் சம்பாதிப்பது; மனைவி பெயரில் ஆயுள் இன்ஷூரன்ஸ் ஏஜன்ஸி எடுத்துப் பெரிய வாடிக்கையாளர்களைக் கடன் வாங்குவோரையும் 'வளைத்து' பாலிஸி எடுக்கவைப்பது, தெரிந்தவர்களுக்குக் குறுக்கு வழியில் கடன் வாங்க உதவி செய்வது, தெரியாதவர்களிடம் கடனில் இவ்வளவு சதவிகிதம் என்று லஞ்சம் வாங்குவது, ஊழல், குழப்பம், கும்மாளம், அரட்டை, அரசியல் அடாவடித்தனம், இதுதான் இன்றைய வாடிக்கையாளர் சேவை!

பாங்க் மேல்-நிர்வாகத்திற்கு வாடிக்கையாளர் வேறு எங்கும் செல்ல இயலாது என்று தெரியும். மேலும் பாங்குகள் எல்லாம் வாடிக்கையாளர்கள் பணத்தைக் கொண்டு தொழிற்சங்கங்களால் தொழிலாளர்களுக்காகவே நடத்தப்படுகிறது என்ற உண்மையையும் அறியும். இந்தத் தொழிற்சங்கங்களை அடக்கத் திராணியில்லை. ஏதோ பாங்குகள் மூடாமல் வேலை என்று பெயருக்கு ஒன்று நடந்தால் சரிதான் என்று மேலும் மேலும் ஆட்களைக்குவித்து ஓர் ஆள் செய்யும்வேலையை மூன்று ஆட்களைக் கொண்டு செய்தால் செலவினங்கள் ஏறி வாடிக்கையாளர்கள் பணத்தின் மதிப்பைக் குறைக்காமல் வேறு என்ன செய்யும்?

Working group on customer service சிபாரிசுகளை மூலையில் தூக்கிப் போட்டாகி விட்டது. கிளார்க்குகளுக்கும் பியூன்களுக்கும் சம்பளம் அதிகமாக்குவது வேலையில் பொறுப்பு, கட்டுப்பாடு முதலியவைகள் உண்டானால்தான் என்று (Package deal) நிபந்தனைகள் போட்ட Indian Bank Association சம்பளம் அதிகமானவுடன் அந்த நிபந்தனைகளை அம்போ என்று கோட்டை விட்டுவிட்டு நிற்கிறது. இந்த அழகில் குறைகளை மறைக்க பாங்க் நிர்வாகங்கள் விளம்பரங்களுக்கு மேல் விளம்பரங்களாகச் செய்த வண்ணம் இருக்கின்றன.

கிளார்க்குகளின் அசிரத்தையைப் போக்கி, பொறுப்பை உணர்த்தி, நாம் வாடிக்கையாளர்கள் பணத்தில் வாழ்கிறோம் என்ற எண்ணத்தை உண்டு பண்ணினால் அதுவே பாங்குகள் வாடிக்கையாளர் சேவையை மிகப் பெரிய அளவில் மாற்றி அமைத்துவிடும். வேறு எந்த கொள்கைகளையும் மாற்றுமுன் பாங்குக் கிளார்க்குகளை ஒரே மொழிப் பிராந்தியத்திற்குள் குறைந்தது 5 வருடத்திற்கு ஒரு முறையாவது மாற்றல் (டிரான்ஸ்பர்) செய்ய வேண்டும் என்று ஓர் அவசரச் சட்டம் (Ordinance) அரசாங்கம் கொண்டு வந்தால்தான் வாடிக்கையாளர்களுக்கு விடிவு காலம். இதை இப்போதே செய்யாவிடில் எப்போதுமே செய்ய முடியாமல் போய்விடக் கூடும்.








(ஷெனாய் வாத்தியத்தின் சோக இசை ஒலிக்கிறது. அந்த இசையின் சோகத்தில் கால் சலங்கை குலுங்கிக் குலுங்கி அழுகிறது.)

கால் சலங்கை: என் எஜமானி நர்த்தகி வசந்தியை இழந்த துக்கம் இன்னும் எனக்கு ஆறவில்லை. என் சோகத்தை மேலும் ஏன் கிளப்புகிறாய்!

ஷெனாய்: என் எஜமானன் அப்பண்ணா காதலி வசந்தியை இழந்த சோகத்தில் உடல் நிலை கெட்டும் அவள் ஆசையை நிறைவேற்ற என்னை இசைத்துப் பணம் ஈட்டுகிறார். அது சோக இசையாகத் தானே வெளிப்படும்?

கால் சலங்கை: அப்பண்ணாவின் மகன் ஆபீசராகி விட்டான்! பெரிய இடத்துச் சம்பந்தம்! இன்னும் என்ன வேண்டுமென்கிறாய்? உன் சோகப் பொழிவைக் குறை!

ஷெனாய்: இசை மேதையான தகப்பனாரை அந்தப் பிள்ளை எப்படி அவமானப் படுத்துகிறான் பார்த்தாயா? தந்தையை வேலைக்காரன் என்று கூறியா மனைவியிடம் அறிமுகப் படுத்துவது? இதைவிடச் சோகம் வேறு என்ன இருக்கிறது? அதனால்தான் இப்படி சோக இசையாகப் பொழிகிறேன்.

கால் சலங்கை: நிறுத்து! நிறுத்து. உன் எஜமான் அப்பண்ணாவிடம் பேரனுக்கு எத்தனை ஆசை! பேரனிடம் உள்ள பாசத்தின் காரணமாகப் பெற்ற மகன் ஷெனாய் வாத்தியத்தை வீசியெறிந்தும் பொறுத்துக் கொண்டு விடுகிறானே அப்பண்ணா. இன்னும் எதற்கு அழுகை? வீசி எறியப்பட்டதில் அடிபட்டு வலிக்கிறதா?

ஷெனாய்: உயிருக்குப் போராடும் அப்பண்ணாவுடைய நெஞ்சு படும் வேதனையைவிட வா எனக்கு வலிக்கப் போகிறது? பேரன், 'தாத்தா பீப்பீ வாசி' என்று கேட்டு விட்டானே. அவன் உயிரை மீட்கத் தன் கடைசி முயற்சியைத் தொடங்கி விட்டான் இசைமேதை! என்னால் சோகத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லையே!

சலங்கை: அடடா! ஷெனாய் இசையைக் கேட்டுப் பேரனுக்கு உயிர் வந்து விட்டது! இசை மேதை அப்பண்ணா தன் உயிரைக் கொடுத்தல்லவா பேரனின் உயிரைக் காத்து விட்டான்! ராஜ்குமார் கதையில் உயிர் விட்டாலும் படத்துக்கு 'உயிர்' கொடுத்திருக்கிறார்!

ஷெனாய்: ஜெயப்பிரதா மட்டும் என்ன? படத்தின் ஆரம்பக் கட்டங்களில் எத்தனை பிரமாதமாக நடனம் ஆடிப் பரவசப்படுத்தி விட்டார்!

சலங்கை: காதுக்கினிய இசையை ஜி.கே. வெங்கடேஷ் அமைத்திருக்கிறார்! முதல் தடவையா தென்னிந்தியப் படத்திலே மேதை பிஸ்மில்லாகான் ஷெனாய் நாதத்தைப் பொழிந்திருக்கிறார்!

ஷெனாய்: உதயசங்கர் பாடல்களும் வசனமும் தந்து ஷெனாய் அப்பண்ணாவைப் பார்க்கத் தூண்டியிருக்கிறார்! கன்னட மொழி ஒரு தடங்கலாயில்லை! உணர்ச்சிக்கு மொழி வேணுமா?

சலங்கை: ஒரே ஒரு குறைதான் இந்த வண்ணப்படத்தில்.....

ஷெனாய்: என்ன?

சலங்கை: சங்கராபரணத்துக்கு முன்னாலேயே இது ரிலீஸ் ஆகியிருக்கக் கூடாதா? ஹூம்....

-பி.எஸ்.எம்.



# முடிவுதேதி ஒத்திப் போடப்பட்டுள்ளது!

❋ ஏராளமான எழுத்தாளர்களின் வேண்டுகோளுக்கிணங்க முடிவு தேதியை ஜூன் 15உ என ஒத்திப் போட்டிருக்கிறோம். எழுத்தாள அன்பர்கள் இந்த நல்வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என நம்புகிறோம்.

● மொத்தப் பரிசுத் தொகையை ரூ. 2000லிருந்து இந்த ஆண்டு ரூ. 2500 ஆக உயர்த்தியுள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இதனை ஐந்தாகப் பிரித்து, ஐந்துவிதமான சிறு கதைகளுக்கு ஐந்து பரிசுகளை வழங்குகிறோம். ஒவ்வொரு பிரிவிலும் சிறந்த சிறுகதைக்கு ரூ. 500 பரிசு:

● சமூகச் சிறுகதை ● ஹாஸ்யச் சிறுகதை
● சரித்திரச் சிறுகதை ● விஞ்ஞானச் சிறுகதை
● மர்மச் சிறுகதை

என்று ஐந்து தலைப்புகளில் சிறுகதைகளை வரவேற்கிறோம்.

பரிசு பெறும் கதைகள் தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு சிறுகதையும் ரூ. 100 சன்மானம் பெறும். இவற்றில் அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

● கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில் இதுவரை எந்தப் பத்திரிகையிலும் எழுதியது இல்லை என்றும், போட்டி முடிவு அறிவிக்கும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.

● நடுவர்கள் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

● உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். தபால் தலைகளை மட்டும் இணைப்பதிலோ அல்லது பின்னால் தனியே அனுப்புவதிலோ பயனில்லை.

● கதைகள் கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

ஆசிரியர், கல்கி, சென்னை–32

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1980



# நான் செய்த பாவம் நானோர் இந்தியன்

கடைசி பக்கம்

கண்ணதாசன்

இந்தியாவே, என் அருமை இந்தியாவே!

எப்போதும் எனக்கு உன் நினைவுதான்!

ஹோட்டலுக்குள் நுழையும் போது — சாப்பிட உட்காரும் போது, அவன் நாற்றம் பிடித்த புளித்த இட்லியைக் கொண்டு வந்து வைக்கும் போது — கசப்பு மாத்திரையை விழுங்குவது போல் அதை விழுங்கும் போது—

என் அருமைத் தாயகமே, நான் உன்னையே நினைக்கிறேன்!

அலுவலகத்தில் ஒருவனை வேலைக்கு வைக்கும் போதும் — என் வாடிக்கைக்காரர்களிடமெல்லாம் அவன் கமிஷன் வாங்கும் போதும்—என்னைக் கடன்காரனாக்கி அவன் பணக்காரன் ஆகும் போதும்—நான் இளித்தவாயனாக நிற்க அவன் தன் பெண்ணுக்கு ஒன்றரை லட்சம் ரூபாயில் திருமணம் செய்யும் போதும் —

ஏ, புனித பூமியே! நான் உன்னைத்தான் நினைக்கிறேன்!

ஒரு வாய் சோற்றில் பத்துக் கல்லைக் கடிக்கும் போதும் — துவரம் பருப்பில் கேசரிப் பருப்பைக் காணும் போதும் — கோதுமை மாவில் மைதா மாவைப் பார்க்கும் போதும்—நெய்யிலே டால்டாவாசம் அடிக்கும் போதும்-

என் அன்னை பாரதமே, நான் உன்னைத் தான் நினைக்கிறேன்!

பிள்ளையைப் படிக்க வைக்கும் போது — அதற்காக நன்கொடை கொடுக்கும் போது— கல்லூரியில் சேர்க்கக் கமிஷன் கொடுக்கும் போது — பட்டம் பெற்ற பிள்ளைக்கு வேலை தேடும் போது — படித்தவனும் பட்டினியால் வாடும் போது —

ஏ, பாரதமே, நான் உன்னைத்தான் நினைக்கிறேன்!

எந்த ஜன்மத்தில் செய்த பாவத்திற்காகவோ, இந்த ஜன்மத்தில் இந்த பூமியிலே இறைவன் என்னைப் படைத்து விட்டான்!

நான் அன்பைத் தேடுகிறேன்; இறந்து விட்ட என் பெற்றோர்கள் அதை எடுத்துக் கொண்டு போய் விட்டதை உணருகிறேன்! நன்றியைத் தேடுகிறேன்; நாயின் வாலிலே மட்டுமே அது தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறேன்!

நான் நாணயத்தைத் தேடுகிறேன்; வெள்ளைக்காரன் கப்பலேறும் போது அதைக் கூடவே கொண்டு போய் விட்டதாகக் கேள்விப்படுகிறேன்!

என்ன துரதிருஷ்டமோ, என்னைப்போன்ற குடிமக்களெல்லாம் விழிக்கும் போது அயோக்கியர்கள் முகத்திலேயே விழிக்கிறார்கள்; தூங்கும் போது திருடர்களைப்பார்த்துவிட்டே தூங்குகிறார்கள்!

மகா முனிவர்களும், வேதங்களும், தெய்வங்களும் அவதாரமெடுத்த என் அன்னை பூமியே!

ஆதியும் பகவனும் பெற்று விட்டதாகச் சொல்லப்படும் கதையைப் போல் நீ ஏராளமான பிள்ளைகளைப் பெற்று விட்டிருக்கிறாய்! அவர்கள் பெற்று விட்டதெல்லாம் கவிதைகள்; நீ பெற்றதெல்லாம் கழுதைகள்! மன்னிக்க வேண்டும் கழுதைகளுக்குத் திருடத் தெரியாது, மோசடி தெரியாது.

எங்கள் ஊர் ஹோட்டல்காரனையும், அரசியல்வாதியையும், வியாபாரியையும் அவற்றோடு ஒப்பிடுவது தவறு!

உனது மடியில் கங்கை ஓடுவது நியாயம் தான்; காரணம், என்றாவது ஒருநாள் இவர்களெல்லாம் அதில் விழுந்து சாக மாட்டார்களா என்பதுதான்!

பூமண்டலத்தில் எந்த பாகத்திலும் இவ்வளவு நாணயம் கெட்ட சமுதாயம் பிறந்ததுமில்லை; இனிப் பிறக்கப் போவதுமில்லை.

இங்கே ஆயிரம் தொழில்கள் இருக்கின்றன; ஆனால் அரசியலுக்குமேல் பெரிய தொழிலே இல்லை!

ரூர்கேலா, துர்க்காபூர், பிலாய் மூன்றுக்கும் ஆன செலவைவிட, ஒவ்வொரு அரசியல் கட்சியும் தேர்தலுக்குச் செலவழிக்கும் பணம் அதிகம்!

தலைவருக்கு நோட்டு மாலை, நோட்டு வேட்டி, நோட்டு சட்டை, நோட்டாலேயே கோவணம் — தலைவர் வாழ்ந்த வாழ்வுக்கும், செய்த சேவைக்கும் இவை தேவை தானல்லவா!

எட்டுத் திசைகளிலும் சுற்றிப் பார்க்கிறேன். இந்தியாவே, என் அருமை இந்தியாவே, நான் இரண்டு வகையான மனிதர்களையே காண்கிறேன்.

ஒருவன், அயோக்கியமான கெட்டிக்காரன் இன்னொருவன், நாணயமான முட்டாள்!

'நாணயமான கெட்டிக்காரன் இந்தியாவில் பிறக்கக் கூடாது' என்பது, இறைவனின் சாபம்!

போகட்டும். இந்த இறைவன் முட்டாள் தனமாக ஒரு காந்தியையும், நேருவையும், ராஜாஜியையும், காமராஜரையும் பெற்று வைக்காமல் இருந்திருந்தால், வெள்ளைக்காரனே உன்னை ஆண்டிருப்பான்.

உன்னுடைய யோக்கியதைக்கு அதுதான் நியாயம் என்பதை என் உடன் பிறப்புகள் தினமும் உணர்த்திக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தியாவே, என் அருமை இந்தியாவே, இனி நீ பிள்ளைகளைப் பெறாதே! அவர்கள் நல்ல தேசங்களில் பிறக்கட்டுமே!



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

